உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவபெருமான் திருவந்தாதி

## கபிலதேவ நாயனார் அருளியது

சங்கரன்கோவில் வித்துவான் **ச. இரத்நவேலன்** அவர்களெழுதிய
பொழிப்புரையுடன் கூடியது

சிவஞான பூஜா மலர் குரோதன ஆண்டு - (1985)
பிரசுரம்: **ஆங்கீரஸ s. வேங்கடேச சர்மா**, மேலமாம்பலம், சென்னை - 600 033]

### முன்னுரை

பதினோராந் திருமுறை நாற்பது பிரபந்தங்கள் கொண்டது. 22-ஆம் பிரபந்தம் “சிவபெருமான் திருவந்தாதி” என்பதாம். இதனை அருளியவர் கபிலதேவ நாயனார். இவரருளிய மூன்று பிரபந்தனக்ள் இத்திருமுறைக்கண் உள்ளது. மூன்றாவது நூல் இந்நூல். வென்பா யாப்பில் செய்யப்பட்ட இந்நூலில் மடக்கு, யமகம் பயின்று வந்துள்ளன. ஆகலான் கற்றோரேயன்றி மற்றோர் இதில் பயிற்சிக் குறைவுடையவராய் உள்ளனர். கற்றோரையும் கலங்க வைக்கும் பாடல்கள் பல இதன்கண் உள்ளன. எனவே ப்ரும்மஸ்ரீ ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா அவர்கள் இந்நூலுக்கு உரை வரைந்தனுப்புமாறு கட்டளையிட்ட பொழுது அஞ்சினேன். திருமுறைக்கு உரை காண்பது எளிய காரியமன்று. அதனாலும் நான் தயங்கினேன். ஆயினும் பன்முறை ஸ்ரீசர்மா அவர்கள் வற்புறுத்தவே “யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது” என்ற நீதிப்படி உரை கண்டுள்ளேன். குற்றங்களைந்து குணங்கொண்டு கோதாட்டுமாறு சைவ நல்லறிஞரைப் பிரார்த்திக்கிறேன்.

கபிலதேவநாயனார் சங்கப் புலவரே ஆயிடினும் திருமுறையில் பேசப்பெறும் கபிலதேவ நாயனார் சங்கப்புலவர் அல்லர் எனக்கூறுவதில் சிலருக்கு மகிழ்ச்சி, சைவர்க்கு சங்கப்புலவரினும் திருமுறை ஆசிரியன்மாரே உயர்ந்தவர். ஆகவே அவர் பாரி நண்பர் ஆயினும் ஆகுக, இன்னா நாற்பது பாடிய ஆசிரியராயினும் ஆகுக, அல்லாது இருப்பினும் இருக்க. அவர் திருமுறை ஆசிரியர், எனவே நம்மவரால் உச்சிமேற் கொள்ளத்தக்கவர். அவரது திருவடி போற்றி நூலைல் கற்போமாக.

இவ்வகையில் என்னைச் செலுத்திய ப்ரும்மஸ்ரீ சர்மா அவர்களைப் போற்றி நன்றியோடும் வணங்கிக்கொள்கிறேன்.

வித்துவான் ச. இரத்நவேலன்
சங்கரன்கோவில்

திருச்சிற்றம்பலம்

**ஒன்று முதலாக நூறளவும் ஆண்டுகள்வாழ்ந்**
**தொன்றும் மனிதர் உயிரையுண் - டொன்றும்**
**மதியாத கூற்றுதைத்த சேவடியான் வாய்ந்த**
**மதியான் இடப்பக்கம் மால். 1**

(பொழிப்புரை): - ஒன்று முதல் நூறு வயதுவரையும் வாழ்ந்து இறப்பினை அடையும் மாந்தர் உயிரை வாங்கும் இயமன் மார்க்கண்டேயர் செய்த ஒப்பற்ற புண்ணியமாகிய சிவபூசையை எண்ணாது அவரது உயிரைக் கவர்ந்து செல்ல முற்பட்டான். அதனால் அக்கூற்றுவனை உதைத்தருளிய சிவந்த திருப்பாதங்களை உடையவன் சிவபெருமான்; அவன் பிறைசூடியவன். அச்சிவபிரானது இடப்பக்கத்தைப் பொருந்தி நிற்பவர் திருமால்.

மனிதர் எனத் தலைமை பற்றிக் கூறினாரேனும் பிறஉயிர்களையும் கொள்க.

**மாலை ஒருபால் மகிழ்ந்தானை வண்கொன்றை**
**மாலை ஒருபால் முடியானை - மாலை**
**ஒளியானை உத்தமனை உண்ணாநஞ் சுண்டற்**
**கொளியானை ஏத்தி உளம். 2**

(பொழிப்புரை): - திருமாலைத் தம் இடப்பக்கத்தில் மகிழ்ந்து வைத்திருப்பவனும், வளப்பம் பொருந்திய கொன்றை மாலையைத் திருப்பள்ளித்தாமமாகத் திருமுடியில் சூடியிருப்பவனும், மாலைக்காலத்துச் செக்கர் வானத்தையொத்த ஒளி மயமான திருமேனியுடையவனும், உத்தமனும், பிரமம் விஷ்ணுவாதி தேவர்களும் கண்டஞ்சியதும் உண்ண முடியாததுமாகிய ஆலால விஷத்தை உண்பதற்கு ஒளித்துக் கொள்ளாதவனுமாகிய சிவபெருமானை நெஞ்சே துதிப்பாயாக.

**உளமால்கொண் டோடி ஒழியாது யாமும்**
**உளமாகில் ஏத்தாவா றுண்டே - உளம்மாசற்**
**றங்கமலம் இல்லா அடல்வெள்ளே றூர்ந்துழலும்**
**அங்கமல வண்ணன் அடி. 3**

(பொழிப்புரை): - அங்கங்களில் எவ்வகைக் குற்றமும் இல்லாது போர் செய்யும் ஆற்றலுடைய ரிஷப வாகனத்தில் ஆரோகணித்து அடியார்க்கு அருள் செய்யத் திரியும் அழகிய தாமரை போன்ற திருவடிகளை உடைய சிவபிரானை, உள்ளம் மயக்கமடைந்து ஓடி நீங்காது மனந்தூயராய் நாமும் இருப்போமானால் வணங்காதிருக்க வழக்குண்டோ? இல்லை.

**அடியார்தம் ஆருயிரை அட்டழிக்குங் கூற்றை**
**அடியால் அருவாகச் செற்றான் - அடியார்தம்**
**அந்தரத்தால் ஏத்தி அகங்குழைந்து மெய்யரும்பி**
**அந்தரத்தார் சூடும் அலர். 4**

(பொழிப்புரை): - மார்க்கண்டேயராகிய அடியாரது அரிய உயிரைத் தன் ஆற்றல் தோன்றக் கவர்ந்து செல்ல முற்பட்டான் இயமன். அவனைத் தம் திருவடியால் செற்று உதைத்து அருவநிலை அடையச் செய்தான் சிவபெருமான். அப்பெருமானை அடியார்கள் உள்ளம் உருகி மெய்ம்மயிர் பொடிப்ப அகப்பூசை செய்து துதிப்பார். அத்துதியே சிவபிரான் சூடும் பூவாகும்.

**அலராளுங் கொன்றை அணியலா ரூரற்**
**கலராகி யானும் அணிவன் - அலராகி**
**ஓதத்தான் ஒட்டினேன் ஓதுவன்யான் ஓங்கொலிநீர்**
**ஓதத்தான் நஞ்சுண்டான் ஊர். 5**

(பொழிப்புரை): - மலர்தலைச் செய்யும் கொன்றையை அடையாளமாலையாகக் கொண்ட ஆரூர்ச் சிவபிரானை விரும்பி அடியாளும் அவ்வடையாளமாலையை அணிந்து கொண்டேன். அதனால் பிறர் தூற்றுதலுக்கு ஆளாகி உள்ளம் ஒடுங்கினேன். அவ்வலர் நீங்கக் கடல்சூழ்ந்த ஊரனும், நீலகண்டனுமாகிய அச்சிவபிரான் திருநாமங்களையான் கூறுவேன்.

தலைவி கூற்று இவ்வெண்பா.

**ஊரும் தொற்றியூர் உண்கலனும் வெண்தலையே**
**ஊரும் விடையொன் றுடைதோலே - ஊரும்**
**படநாகம் மட்டார் பணமாலை ஈதோ**
**படநாகம் அட்டார் பரிசு. 6**

(பொழிப்புரை): - சிவபெருமானுக்கு ஊர் திருவொற்றியூர். உண்ணும் பாத்திரமோ பிரமம் கபாலம்; ஊர்தியோ ஒப்பற்ற ரிஷபம்; உடையாவது தோலே; ஊர்ந்து செல்லும் படத்தோடு கூடிய நாகமும் தேன் பொருந்திய பூக்களும் மாலையே, யானை வடிவில் இருந்த கயாசுரனைச் சங்கரித்த சிவபெருமான் தன்மைகள் இவையே.

**பரியானை ஊராது பைங்கணே றூரும்**
**பரியானைப் பாவிக்க லாகா - பரியானைக்**
**கட்டங்கம் ஏந்தியாக் கண்டுவாழ் நன்னெஞ்சே**
**கட்டங்கம் ஏந்தியாக் கண்டு. 7**

(பொழிப்புரை): - குதிரை, யானையை வாகனமாகக் கொள்ளாது பசிய கண்களைக் கொண்ட ரிஷபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமானை, மனத்தால் பாவிக்கவொண்ணாத பெருமை மிக்கவனை, மழு ஏந்தியவனாகவும், கட்டிய எலும்பையே ஆபரணமாக ஏந்தியவனாகவும் கண்டு நன்னெஞ்சமே நீ வாழ்வாயாக.

**கண்டங் கரியன் உமைபாலுந் தன்பாலும்**
**கண்டங் கரியன் கரிகாடன் - கண்டங்கள்**
**பாடியாட் டாடும் பரஞ்சோதிக் கென்னுள்ளம்**
**பாடியாக் கொண்ட பதி.** 8

(பொழிப்புரை): - கழுத்தில் நீலநிறமுடையவன், உமையை ஒரு பாகம் கொண்ட அரிய திருக்கோலங்கொண்டவன், சுடுகாடன், கண்டங்கள் செம்மையாகப் பாட அதற்கேற்ப நாட்டியும் செய்யும் பெரிய சோதி மயமானவன் சிவபெருமான். அச்சிவபெருமானது பாடிவீடாக என் உள்ளத்தைக் கொண்டேன். ஆதலால் அவ்வுள்ளமே ஒரு பதியாகும்.

பாடிவீடு - பாசறை; பதி - க்ஷேத்திரம், கடவுள் உறைவிடம்.

**பதியார் பழிதீராப் பைங்கொன்றை தாவென்**
**பதியான் பலநாள் இரக்கப் - பதியாய**
**அம்மானார் கையார் வளைகவர்ந்தார் அஃதேகொல்**
**அம்மானார் கையார் அறம்.** 9

(பொழிப்புரை): - "நகர்த்தார் கூறும் பழிதீரவில்லை. ஆகலான் தேவரீர் அடையாளமாகிய கொன்றை மாலையைத் தந்தருளும்" என்பதொன்றையே அடியாளாகிய யான் பலநாள் யாசித்து வேண்டவும் தலைவராகிய அழகிய மான் ஏந்திய கையை உடைய சிவபிரான் அவ்வடையாள மாலையைத் தாராது என்னை மெலியச் செய்து வளை கவர்ந்தார். அது தானோ கடவுளது கைப்பட்ட நல்ல அறம்?

**அறமானம் நோக்கா தநங்களையும் செற்றங்**
**கறமாநஞ் சுண்ட அமுதன் - அறமான**
**ஓதியாள் பாகம் அமர்ந்தான் உயர்புகழே**
**ஓதியான் தோற்றேன் ஒளி.** 10

(பொழிப்புரை): - அறத்தையும் பெருமையையும் பாராது மன்மதனையும் எரித்து அறமாக ஆலகால விஷத்தை அமுதாக உண்ட அமிந்தனும், கருமணலை ஒத்த கூந்தலை உடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவனும் சிவபெருமான். அவன் புகழையே பேசி யான் எனது மேனியில் பசலை பூத்தேன்.

பசலை - அழகுத் தேமல், தலைவரைப் பிரிந்த தலைவியரிடம் தோன்றுவது. இவ்வெண்பா தலைவி கூற்று.

**ஒளியார் சுடர்மூன்றும் கண்மூன்றாக் கோடற்**
**கொளியான் உலகெல்லாம் ஏத்தற் - கொளியாய**
**கள்ளேற்றான் கொன்ரையான் காப்பிகந்தான் நன்னெஞ்சே**
**கள்ளேற்றான் கொன்றை கடிது.** 11

(பொழிப்புரை): - உலகிற்குப் பிரகாசம் தரும் சூரியன் சந்திரன், அக்நி ஆகிய முச்சுடர்க்கும் ஒளிதரும் காரணமாய முக்கண்களைக் கொள்வதற்குப் பின்வாங்காத சிவபிரான், உலகமெல்லாம் வணங்க ஒளியானயாவுத் திரண்ட ரிஷப வாகனத்தமர்ந்தான்; கொன்றை மாலையை அடையாளாமாகக் கொண்டான். தன்னைப் பிறர் பாதுகாக்கும் தன்மை நீங்கி யவன் சிவபிரான், எனவே பிறரைக் காப்பாற்றுபவன். ஆதலால் நல்ல நெஞ்சமே, தேன் பொருந்திய அவனது கொன்றைப்பூக்கிடைக்கும் காலம் அண்மையிலுள்ளது. இவ்வெண்பாவும் தலைவி கூற்று.

**கடியரவர் அக்கர் கரிகாடு கோயில்**
**கடியரவர் கையதுமோர் சூலம் - கடியரவர்**
**ஆனேற்றார்க் காட்பட்ட நெஞ்சமே அஞ்சல்நீ**
**ஆனேற்றார்க் காட்பட்டேம் யாம்.** 12

(பொழிப்புரை): - கடிக்கும் பாம்பையும் உருத்திராக்ஷங்களையும் மாலையாக உடையவர், சுடுகாட்டைக் கோயிலாகக் கொண்டவர், காவல் பெற்ற பாம்பைக் காப்பாகக் கட்டிய கைக்கண் உள்ள ஒப்பற்ற சூலம் ஏந்தியவர், அதிசயமான பாம்பாபரணர். வெள்ளேற்றை வாகனமாகக் கொண்டவர் சிவபிரான். அவர்க்கு அடிமை பூண்டொழுகும் நல்ல நெஞ்சமே, நீ பயப்படாதே. தர்மத்தையே வாகனமாகக் கொண்ட அவரால் யாம் காப்பாற்றப்படுவது உறுதி.

**யாமான நோக்கா தலர்கொன்றைத் தார்வேண்ட**
**யாமானங் கொண்டங் கலர்ந்தந்தார் - யாமாவா**
**ஆவூரா ஊரும் அழகா அனலாடி**
**ஆவூரார்க் கென்னுரைக்கோம் யாம்.** 13

(பொழிப்புரை): - யாம் மானத்தை நோக்காமல் மலர்ந்த கொன்றைப் பூவாகிய மாலையை விரும்பி வேண்ட, எமது பெருமையைத் தமது உடைமையாக்கிய பழிக்கிடமான தேமலைத் தந்தார் சிவபெருமான். 'ஏறு ஊர்ந்து செல்லும் அழகரே, அனலைக் கையிலேந்தி ஆடுபவரே, அடியாள் இரங்கத்தக்கவன்' என்று கூறி அரற்றுவதல்லால் ஆவூரரிடம் வேறு என்ன பேச வல்லேம் யாம்?

யாம் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. இவ்வெண்பா தலைவி கூற்று.

**யானென்றங் கண்ணா மலையான் அகம்புகுந்து**
**யானென்றங் கையறிவும் குன்றுவித்து - யானென்றங்**
**கார்த்தானே யாயிடினும் அம்பரன்மேல் அங்கொன்றை**
**ஆர்த்தானேல் உய்வ தரிது.** 14

(பொழிப்புரை): - 'யானே உன் தலைவன்' - என்று திருவண்ணாமலையான் மனம் புகுந்து, யான் என்ற செருக்கிற்குக் காரணமான ஐம்பொறியறிவையும் குறைத்து தன்னை முன்னிறுத்தி உயிரைப் பின்போக்கி அடியனாக்கும் நல்லருள் செய்தாலும் அச்சிவபெருமான் மேல் அழகிய கொன்றை மாலை சூட்டிப் பணி செய்வானேல் உய்வது அரிய காரியமன்று.

**அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூர் அம்மான்**
**அரியாரும் பாகத் தமுதன் - அரியாரும்**
**வேங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம்**
**வேங்கடத்து நோயால் வியந்து.** 15

(பொழிப்புரை): -வண்டுகள் பொருந்தி ரீங்காரம் செய்யும் பூஞ்சோலைகல் சூழ்ந்த திருவாமாத்தூர்ச் சிவபெருமான் திருமாலை ஒரு பாதியில் கொண்ட அமிர்தன்; சிங்கங்கள் உலா வரும் திருவேங்கட மலையப் பொருந்தியவன். அவனை வியந்து பொருந்தாத உயிர்க்கூட்டமெல்லாம் உடல் நோயால் வருந்தும்.

**வியந்தாழி நன்னெஞ்சே மெல்லியலார்க் காளாய்**
**வியந்தாசை யுள்மெலிய வேண்டா - வியந்தாய**
**கண்ணுதலான் எந்தைகா பாலி கழலடிப்பூக்]**
**கண்ணுதலாம் நம்பாற் கடன்.** 16

(பொழிப்புரை): - எனது நன்னெஞ்சமே! மென்மையான இயல்புகளை உடைய பெண்களை விரும்பி அழிய வேண்டா; அவரை அதிசயித்து ஆசைப்பட்டும் உள்ளம் மெலிய வேண்டா. வியந்து ஆராயத்தக்க கண்ணை நெற்றியில் கொண்டவன். எம் தந்தை, காபாலி ஆகிய சிவபெருமானது, வீரகண்டையணிந்த திருபாதப் பூவைத்தியானித்தல் நம்மவர்க்குக் கடனாம்.

**கடனாகம் ஊராத காரணமும் கங்கை**
**கடனாக நீகவர்ந்த வாறும் - கடனாகப்**
**பாரிடந்தான் மேலிப் பயிலும் பரஞ்சோதி**
**பாரிடந்தான் மேயாய் பணி.** 17

(பொழிப்புரை): - மதம் பொழியும் யானையை வாகனமாகக் கொள்ளாத காரணமும், ஆகாச கங்கையைத் திருமுடியில் மறைத்துக் கொண்ட வழியும், பூதக்கூட்டத்தைப் பொருந்திப் பழகுவதைக் கடனாகக் கொண்ட காரணமும், பூமியாகிய இடத்தைப் பொருந்திய வகையும் சிவபெருமானாகிய மேலான சோதியே! ஏன் என்று திருவருள் பண்ணு.

**பணியாய் மடநெஞ்சே பல்சடையான் பாதம்**
**பணியாத பத்தர்க்குஞ் சேயான் - பணியாய**
**ஆகத்தான் செய்துமேல் நம்மை அமரர்கோ**
**னாகத்தான் செய்யும் அரன்.** 18

(பொழிப்புரை): - இளமை பொருந்திய நெஞ்சே! நீ பணிவாயாக. பலவாகிய சடையையுடையவன், தமது திருப்பாதமிடும் ஆணைக்கடங்காத பக்தர்களுக்கும் தூரத்தில் உள்ளவன். பாம்புகளையே ஆபரணமாகக் கொண்ட திருமேனியையுடையவன் சிவபெருமான். அவனுக்கு ஆட்பட்டுப் பணி செய்வோமாயின் நம்மை அவ்வரன் தேவர்களுக்கும் அரசனாகச் செய்வான்.

**அரன்காய நைவேற் கநங்கவேள் அம்பும்**
**அரன்காயும் அந்தியுமற் றந்தோ - அரங்காய**
**வெள்ளில்சேர் காட்டாடி வேண்டான் களிறுண்ட**
**வெள்ளில்போன் றுள்ளம் வெறிது.** 19

(பொழிப்புரை): - அரன் மேல் ஏற்பட்ட மையல் என்னை வருத்தி நான் வருந்துவேன். ஆனால் அச்சிவபெருமான் அம்மையலுக்கு காரணமான அந்திப் பொழுதையும் மன்மதனையும் அந்தோ அம்போடும் காய்ந்தானே. சுடுகாட்டை அரங்காகக் கொண்டு நட்டமாடும் சிவபெருமான் அடியானை விரும்பவில்லை போலும். அதனால் எனது உள்ளம் யானை யுண்ட விளங்கனி போல வெறுமையாயிற்று. இவ்வெண்ப தலைவி கூற்று.

**வெறியானை ஊர்வேந்தர் பின்செல்லும் வேட்கை**
**வெறியார்பூந் தாரான் விமலன் - வெறியார்தம்**
**அல்லல்நோய் தீர்க்கும் அருமருந்தாம் ஆரூர்க்கோன்**
**அல்லனோ நெஞ்சே அயன்.** 20

(பொழிப்புரை): - மதங்கொண்ட யானையை ஊர்ந்து செல்லும் மன்னர்கள் பின்னே வர ஆசைப்படும் பவனி மேற்கொள்ளும் வாசனை பொருந்திய பூமாலையணிந்த மலமற்றவன் சிவபெருமான். அப்பெருமான் தம்மேல் பித்துக்கொண்டவர் பெற்ற துன்பநோய் நீக்கும் அரிய மருந்தாவான். ஆதலால், நெஞ்சே! திருவாரூர்த் தலைவனாகிய அச்சிவபிரான் அல்லனோ நம் தலைவன்?

**அயமால்ஊண் ஆடரவம் நாண்அதள தாடை**
**அயமாவ தானேறூர் ஆரூர் - அயமாய**
**என்னக்கன் தாழ்சடையன் நீற்றன் எரியாடி**
**என்னக்கன் றாழும் இவன்.** 21

(பொழிப்புரை): - ‘சிவபிரானுக்கு உணவோ ஐயம் ஏற்கும் சோறு; அரைஞாண் கயிறோ பாம்பு; ஆடையோ புலித்தோல்; குதிரை போன்று ஊரிதியாக இருப்பதோ ரிஷபம்; ஊரோ திருவாரூர். எனது நற்பேறாகிய அச்சிவபிரான் தாழ்ந்த சடைகளோடு கூடியவன்; திருநீறு தரித்தவன்; கையில் எரி தவழ நிருத்தம் செய்பவன்’ என்று கூறி வாடி அவன் பெருமையை எண்ணி ஆழ்ந்து போவான் இப்பெண்மணி.

மகள்நிலை கண்டு செவிலி கூறியது இவ்வெண்பா.

**ஆழும் இவனையுங் கையகல ஆற்றேனென்**
**றாழும் இவளை அயராதே - ஆழும்**
**சலமுடியாய் சங்கரனே சங்கக் குழையாய்**
**சலமுடியா தின்றருளுன் தார்.** 22

(பொழிப்புரை): - ‘சடை முடியில் கங்கையை ஆழ்ந்து போகச் செய்த சங்கரனே, சங்கைக் குழையாய்க் கொண்டவனே! உனது மையலில் ஆழ்ந்திருக்குமிவளை, உன் கையைவிட்டு நீங்கேன்’ என்று உரைப்பதில் ஆழும் இவனை மறவாதே! வஞ்சியாது இன்று உனது அடையாள மாலையைத் தந்து உய்யச் செய்.

இவ்வெண்பா தோழி கூற்று.

**தாராய தண்கொன்றை யான்இரப்பத் தானிதனைத்**
**தாராதே சங்கஞ் சரிவித்தான் - தாராவல்**
**ஆனைமேல் வைகும் அணிவயல்ஆ ரூர்க்கோன்நல்**
**லானையும் வானோர்க் கரசு.** 23

(பொழிப்புரை): - வலிய ஆனேற்றல் எழுந்தருளும் வரிசையான வயல்கள் சூழ்ந்த திருவாரூர்த் தலைவன் நல்ல தமது சாரூபத்தையும் இந்திர பதவியையும் தாராதவனோ? அப்படியிருக்க அடையாள மாலையான கொன்றை மாலையை யான் யாசித்துப் பலமுறை வேண்டவும் தாராது என்னை மெலியச் செய்து சங்க வளையல்கள் கழலும்படி செய்துவிட்டானே. என்னே இவனது கருணை?

உயர் பதங்களை எளிதாய்த் தரவல்லானுக்கு அடையாள மாலை தருதல் எளியது தானே என்பது குறிப்பு. இவ்வெண்பா தலைவி கூற்று.

**அரசுமாய் ஆள்விக்கும் ஆட்பட்டார்க் கம்மான்**
**அரசுமா மங்கொன்று மாலுக் - கரசுமான்**
**ஊர்தி எரித்தான் உணருஞ் செவிக்கின்பன்**
**ஊர்தி எரித்தான் உறா.** 24

(பொழிப்புரை): - தமது திருவடித் தொழும்பர்க்குக் கண்ணுதற்கடவுள் அரசுமாகி ஆளச்செய்வான்; தம்மைப் பொருந்திய திருமாலுக்குத் தலைவனுமாவன்; மன்மதனை ஊர்தியோடும் எரித்தான். அவனை உணர்ந்தோர் செவிக்கின்பம் செய்பவன். உதாசினம் செய்த திரிபுரங்களை எரியச் செய்தான்.

**உறாவேஎன் சொற்கள் ஒளிவளைநின் உள்ளத்**
**துறாவேதீ உற்றனகள் எல்லாம் - உறாவேபோய்க்**
**காவாலி தார்நினைந்து கைசோர்ந்து மெய்மறந்தான்**
**காவாலி தாநின் கலை.** 25

(பொழிப்புரை): - அடியாள் சொற்கள் தேவரீர் திருச்செவியில் ஏற்றுக் கொள்ளப்படவில்லையே. இவனது ஒளி பொருந்திய வளையல்கள் கழன்ற செய்திகள் தேவரீர் திருவுள்ளத்தில் உதாசினம் செய்யப்பட்டனவே. தீமையானவை யாவும் தேவரீரைப் பொருந்தாவே. கபாலத்தைக் கையில் ஏந்திய தேவரீரது அடையாள மாலையை விரும்பிப்போய்க் கை கோர்ந்து இப்பெண் தன்னையே மறந்துவிட்டாள். காபாலியே உமது கலை (ஆடை) தந்து இவளது நிலையை மாற்றியருள் வீராக.

**கலைகாமின் ஏர்காமின் கைவளைகள் காமின்**
**கலைசேர் நுதலீர்நாண் காமின் - கலையாய**
**பான்மதியன் பண்டரங்கன் பாரோம்பு நான்மறையன்**
**பான்மதியன் போந்தான் பலிக்கு.** 26

(பொழிப்புரை): - “கலைசேர்நுதலிர்” என்பது முதலாகத் தொடங்கி “நாண்காமின்” என்பதை இறுதியில் வைத்து உரைக்க கலைசேர் - பிறை சேர்ந்தது போலும். கலையாய பால் - நூல்களாய பகுதிகள். மதியன் - அவற்றால் விளங்கப்பெறும் அறிவாய் உள்ளவன் ‘பாண்டங்கன்’ என்பதுகுறுகி நின்றது. பாண்டரங்கம், ஒருவகைக் கூத்து, பாலமதியன் - பால்போலும் பிறையை அணிந்தவன். பலி - பிச்சை. ‘பலிக்குப் போந்தான்’ என்க. ‘தானேமகளிரை மெலியச் செய்தல் போகப் பிறையையும் அணிந்துவந்தான்’ என்றபடி முதற்கண் உள்ள கலை - ஆடை. காமின் - இழவாது காப்பாற்றுங்கள். ஏர் - அழகு. இது தொழியர் தலைவியர்க்குக் கூறியது.

**பலிக்குத் தலையேந்திப் பாரிடங்கள் சூழப்**
**பலிக்கு மனைப்புகுந்து பாவாய் - பலிக்குநீ**
**ஐயம்பெய் என்றானுக் கையம்பெய் கின்றேன்மேல்**
**ஐயம்பெய் தான்அநங்கன் ஆய்ந்து.** 27

(குறிப்புரை): - பலிக்கு - பிச்சைக்கு, பலிக்கும் மனை - பயன் விளையும் இல்லம். பாவாய் - பெண்ணே 'பல்லி' என்பது இடைக்குறைந்து "பலி" என வந்தது. பல்லிக்கு - பல்லைக் காட்டிக்கொண்டிருக்கின்ற இந்தப்பாத்திரத்தில். ஐயம் பெய் - பிச்சையிடு. ஐ அம்பு - ஐந்து அம்புகள். அநங்கன் - மன்மதன். இது தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றது.

**ஆயம் அழிய அலர்கொன்றைத் தார்வேண்டி**
**ஆயம் அழிய அயர்வேன்மேல் - ஆயன்வாய்த்**
**தீங்குழலும் தென்றலும் தேய்கோட் டிளம்பிறையும்**
**தீங்குழலும் என்னையே தேர்ந்து.** 28

(குறிப்புரை): - ஆய் அம் - நணுகிய அழகு. ஆயம் - தோழியர் கூட்டம். அவர் அழிதலாவது வருந்தி இரத்தல். 'தோழியர் வருந்திக்கொண்டிருக்கச் சோர் வடைகின்ற என்மேல்' என்க. 'ஆயன் குழல்' என இயையும் ஆயர் ஊதும் குழல் மாலைக்காலம் நெருங்குதலைத் தெரிவித்தலால் தனிமையால்வாடுவார்க்கு அதனால் துன்பம் மிகும். தேய் கோடு - கூரிய முனைகள். 'இவை வருந்துதல் சொல்ல வேண்டுமோ' என்பதாம். தீங்கு உழலும் - தீமை செய்து கொண்டு திரிகின்றன. இதுவும் கைக்கிளைத் தலைவி கூற்று.

**தேரோன் கதிரென்னுஞ் செந்தழலால் வெந்தெழுபேய்த்**
**தேரோன் கதிரென்னுஞ் செய்பொருள்நீ - தேராதே**
**கூடற்கா வாலி குரைகழற்கா நன்னெஞ்சே**
**கூடற்கா வாலிதரக் கூர.** 29

(குறிப்புரை): - "நன்னெஞ்சே" என்பதை முதலில் வைத்தலும் "கழற்கு ஆ" என்பதில் உள்ள "ஆ" என்பதை இறுதியில் வைத்தலும் உரைக்க. தேரோன் - வியத்தகுதேரை உடையவன்; சூரியன். வெந்து, (மணல்கள்) வேதலால் பேய்த் தேர் - கானல். அதனையும் ஒரு தேவனாக வைத்து "பேய்த்தேரோன்" என உயர்திணையாகக் கூறினார். அதன் இழிவு தோன்றுதற்கு, 'இளமையார் போவார்; முதுமையார் வருவார்' என்றல் போல, கதிர் - ஒளி. பேய்த் தேரின் ஒளி நிலையாத நீங்குவது போல நில்லாது நீங்கும் பொருள்' என்க "என்னும்" என்பதன் உருவக உருபும், உவம உருபுமாய் வந்தன. தேராது - அதனை அடையும் வழியை ஆராயாமல், கூடல் காவாலி மதுரையில் உள்ள கபாலி, அவன் கழலைக்

கூடுதற்காக, ஆலிதர - கண்ணீர் மழை போல வார, கூர் ஆ - மிகுந்த அன்பை உடைய ஆகு.

**கூரால மேயாக் குருகோடு நைவேற்குக்**
**கூரார்வேற் கையார்க்காய்க் கொல்லாமே - கூரார்**
**பனிச்சங்காட் டார்சடைமேற் பால்மதியைப் பாம்பே**
**பனிச்சங்காட் டாய்கடிக்கப் பாய்ந்து.** 30

(குறிப்புரை): - கூர் ஆலம் - மிக்க நீர். (அதன்கண் சென்று) மேயாக் குருகு - இரையை உண்ணாமல் (ஏதோ காரணத்தால்) வாடியிருக்கின்ற) நீர்ப் பறவையோடு. நைவேற்கு - (உன்னையும் உன் துணை விட்டுச் செல்ல)' வாடுகின்றாயோ' என்று சொல்லி வருந்துகின்ற என பொருட்டு, 'பாம்பே, பால் மதியைப் பனிச்சு அங்கு அட்டாய்' என இயைத்து முடிக்க. 'பனிப்பித்து' என்பது பிறவினை விகுதி தொக்கு, 'பளிச்சு' எனப்போலியாயிற்று. 'நடுங்குவித்து' என்பது பொருள். அங்கு ஆட்டாய் - அந்தச் சடையிலே அலைக்கழி. தமக்குத் துன்பம் செய்பவர்களைத் தம்மால் துன்புறுவிக்க இயலாதபொழுது, அதற்கு ஏற்புடையவர்களைக் கொண்டு துன்புறத்த விலாகிய உலகியல்பு பற்றி, தன்னை வருத்தும் பால்மதியை வருத்தும் படி பாம்பை வேண்டிக் கொண்டாள் காதல்நோயால் வருந்துகின்ற தலைவி. கடிக்கப் பாய்ந்து, கடிக்கப் போவது போல் பாய்ந்து (ஆட்டு). 'கடித்துக்கொன்ற விட்டால் சிவபெருமான் உன்னை ஒறுப்பார்) ஆதலின், அது வேண்டா' என்பாள். 'கூரார் வேல்கையார்க்காய்க் கொல்லாமே' என்றாள். வேல் - முவிலை வேல், மூன்றாம் அடியில், கூந்தலைக்குறிப்பதாகிய 'பனிச்சை' என்பது, ஈற்றில் அம்முப்பெற்று, "பனிச்சம்" எனவந்தது. கூர் ஆர்பனிச்சம் - அடர்த்தி மிகுந்த கூந்தல். இஃது உமாதேவிதன் பாவகத்தைக் குறித்தது. காட்டு ஆர் சடை - காடு போலும் சடை இதுவும் காதற்பட்டாள் ஒருத்தியது கூற்று.

**பாயும் விடையூர்தி பாசுபதன் வற்தெனது**
**பாயிற் புகுதப் பணை முலைமேல் - பாயிலன்ற**
**கொன்றாய் குளிர்சடையாற் கென்நிலைமை கூறாதே**
**கொன்றாய் இதுவோ குணம்.** 31

(குறிப்புரை): - (கொன்றை) என்பது விளியேற்குமிடத்து, 'கொன்றாய்' எனநிற்கும் நற்கொன்றாய் - நல்ல கொன்றை மலரே. இதனை முதலிற் கொள்க. பாயில் புகுத - படுக்கையில் புகவும். பனை முலை மேல் பாய் - பருத்த தனங்களின் மேல் படுக்கவும் (இலன்) "பாய்" - பரவி. இது 'படுத்து' என்னும் பொருட்டாய் நின்றது. இதனைச் செயவென் எச்சமாகத் திரிக்க (அதனால் நீயாயினும்) என் நிலைமைகள் குளிர் சடையாற்குக் (கூறினால் உய்வேன்) கூறாமையால்

என்னைக்கொன்றுவிட்டாய் (பெரிய இடத்தில் உள்ளவர்கட்கு) இதுவோ குணம்) (நன்மை) இதுகொன்றையோ டிரங்கிய காமம் மிக்க கழிபடர்கிளவி.

**குணக்கோடி கோடாக் குளிர்சடையான் வில்லின்**
**குணக்கோடி குன்றஞ்சூழ் போகித் - குணக்கோடித்**
**தேரிரவில் வாரன் சிவற்காளாஞ் சிந்தனையே**
**தேரிரவில் வாழும் திறம்.** 32

(குறிப்புரை): - குணக் கோடி - கோடி குணம்; 'அளவற்ற நன்மைகள்' என்றபடி. கோடா - அவற்றின்றும் மாறுபடாத வில்லின் குணம் - வில்லன் நாண், 'குணத்துக்கு' என்பதில் அத்துச்சாரியை தொகுக்கப்பட்டது. சிவபெருமானது வில்லின்நாண் பாம்பு. அஃது பாம்புகள் வாழும் நாக லோகத்தைக் குறித்தது. குன்றம், மேருமலை. குணக்கு கிழக்கு - கிழக்கே ஓடி, இல் வாரான் என்க. மூன்றாம் அடியில் 'இரவி' என்பதன் ஈற்ற இகரம் தொகுக்கப்பட்டது. ஈற்றடியில் உள்ள "தேர்", அறிவாயாக' என ஏவல் வினை முற்று. 'நெஞ்சே' என்பது வருவித்துக் கொள்க. 'நெஞ்சே' இரவி, சிவபெருமானது வில்லின் நாணாகிய பாம்பு வாழும் உலகத்திற்கு ஓடி, அதன் பின்பு மேருவைச் சுற்றி வந்து, கீழ்த்திசையை அடைந்து, தனது தேரில் எனது இல்லத்திற்கு நேராக வர வேண்டும். அவ்வாறு அவன் வரவில்லை. ஆகையால் நாம் இரவில் (இறந்துபடாது) உயிர்வாழும் முறைசிவனுக்கு அடிமையாகும் நிலைமையைச் சிந்தித்திருப்பதே. இதனை நீ அறிவாயாக - என்பது இதன் பொருள் இதுவும் பெண்பாற் கைக்கிளை.

**திறங்காட்டுஞ் சேயாள் சிறுகிளியைத் தான்தன்**
**திறங்காட்டுந் தீவண்ணன் என்னும் - திறங்காட்டின்**
**ஊரரவம் ஆர்த்தானோ டென்னை உடன்கூட்டின்**
**ஊரரவஞ் சால உடைத்து.** 33

(குறிப்புரை): - திறம்காட்டும் சேயாள் - அழகினால் யாவர்க்கும் ஒன்றுபடுத்திக் காட்டப்படும் இலக்குமி, 'அழகினால் யாவாராலும் 'இலக்குமி' என்றே எண்ணப்படும் பவன்' என்றபடி என்றது தலைவியை "சிறுகிளியை" என்பதன் பின் நோக்கி' என ஒரு சொல் வருவிக்க 'சேயாள் சிறு கிளியை (நோக்கி) ஊர் அரவம் உடைத்து என்னை அரவம் ஆர்த்தா னோடு கூட்டின், தீவண்ணன் தன் திறம்காட்டும்' என இயைத்து முடிக்க. தன் திறம் - திருவருள் காட்டும் - உனக்கு எந்தவகையிலாவது விளங்கச்செய்வான். மூன்றாவதாய் வந்த "திறம்" என்பதில் ஆக்கம் விரித்து, திறமாகக் காட்டில் ஊர்கின்ற அரவம் (பாம்பு) என்க. ஊர் அரவம் - ஊரார் தூற்றும் அலர். சால உடைத்து - முற்றிலும் போக்கிய. 'எனக்காக நீ தீவண்ணனிடத்தில் தூது செல்ல வேண்டும்' என வேண்டிக் கொண்டபடி.

**உடையோடு காடாடி ஊரையம் உண்ணி**
**உடையாடை தோல்பொடிசந் தென்னை - உடையானை**
**உன்மத் தகமுடிமேல் உய்த்தானை நன்னெஞ்சே**
**உன்மத் தகமுடிமேல் உய்.** 34

(குறிப்புரை): - (எப்பொழுதும்) உடைந்து ஓடுகளை யுடைய காட்டில் ஆடிக்கொண்டு, ஊரார் இடுகின்ற ஐயத்தையே உண்பவனாய், தோலையே' உடையும் ஆடையும் ஆகவும், சாம்பலையே சந்தனமாகவும், என்னை ஆளாகவும் உடையவனும், உன்மத்தத்தை உண்டாக்குகின்ற பூவை (ஊமத்தையை) முடிமேல் அணிந்தவனும் ஆகிய சிவபெருமானை, நல்ல நெஞ்சமே, உனது மத்தகத்தின் மேல் (தலையின் மேல்) உள்ள குடுமிக்கு மேலே இருக்கச் செலுத்து. உடை, அரையில் உடுப்பது, ஆடை, தோள் மேல் இடுவது இதனை 'உத்தரியம்' என்பர். சந்து சந்தனம். ஆடி அசைவதால், 'ஆடை' எனப்பட்டது. வேண்டும் இடங்களில் ஆக்கம் விரிக்க "அப்பூதி - குஞ்சிப் பூவாய் நின்றசேவடியாய்" என்பதனாலும் இறைவனுடைய திருவடிகள் அடியார்களது குடுமிகளில் சூடிக்கொள்ளும் பூவாதல் விளங்கும்.

**உய்யாதென் ஆவி ஒளிவளையும் மேகலையும்**
**உய்யா துடம்பழிக்கும் ஒண்திதலை - உய்யாம்**
**இறையானே ஈசனே எம்மானே நின்னை**
**இறையானும் காண்கிடாய் இன்று.** 35

(குறிப்புரை): - இரண்டாம் அடியில், "உய்யா" என்றது, 'கழல விடுத்து'என்றதாம். 'திதலை உடம்பை அழிக்கும் எனமாற்றிக் கொள்ள. "உடம்பு" என்றது,உடம்பில் உள்ள அழகை. தேமலைக் குறிப்பதாகிய'திதலை' என்பது இங்கு பசலையைக் குறித்தது. தனிச்சீரில் உள்ள, "உய் ஆம்" என்றது,'உயிர்கட்கெல்லாம் உய்தியாய் உள்ள' என்றபடி.உய், முதனிலைத் தொழிற் பெயர், இறையானும் - சிறிதாகிலும் காண் கிடாய் - காணக் கிடத்து.உன்னைக் காண என்னைக் கிடத்து' என்க. இதுவும் கைக்கிளைத் தலைவி கூற்று. 1. திருமுறை - 4.12.10.

**இன்றியாம் உற்ற இடரும் இருந்துயரும்**
**இன்றியாம் தீர்தும் எழில்நெஞ்சே - இன்றியாம்**
**காட்டாநஞ் சேற்றாஅன் காமரு வெண்காட்டான்**
**காட்டான்அஞ் சேற்றான் கலந்து.** 36

(குறிப்புரை): - "எழில்நெஞ்சே" என்பது முதலாகத் தொடங்கி யுரைக்க.எழில் - எழுச்சி; ஊக்கம் யாம் காட்டாஇன்றி நஞ்சுஏற்றான் - யாம் சான்றாக இல்லாமல் விடத்தைஉண்டான். (தேவர்கள் நஞ்சு ஊட்டும் பொழுது நாம்இருந்திருந்தால் தடுத்திருப்போம் என்றபடி.)காட்டான் அஞ்செழுத்து. உணர்வை விளக்கும்விளக்காக

அஞ்செழுத்தை ஏற்ற பெருமான், காட்டுகாட்டுவது; விளக்கு, ஆன், மூன்றன் உருபு."காட்டான்" - என்றது, 'காட்டாய் இருத்தலால்'என்றபடி. கலந்து - நம்மிடம் வந்து கலந்தமையால்,இடர் - இடையூறுகள்.

**கலம்பெரியார்க் காஞ்சிரங்காய் வின்மேரு என்னும்**
**கலம்பெரிய ஆற்கீழ் இருக்கை - கலம்பிரியா**
**மாக்கடல்நஞ் சுண்டார் கழல்தொழார்க் குண்டாமோ**
**மாக்கடனஞ் சேரும் வகை.** 37

(குறிப்புரை): - முதற்கண் உள்ள"கலம்" - அணிகலம். பெரியார்க்கு ஆம் சிரம்- பெரிய தேவர்களுக்கு ஆன தலையால் ஆகிய மாலை,காய் வில் - பகைவர்களை அழிக்கும் வில். என்னும் -என்று சொல்லப்படும். இரண்டாம் அடி முதலில் 'களம்'என்பது எதுகை நோக்கி, "கலம்" எனத் திரிந்துநின்றது. களம் பெரிதாதலாவது, நிழலால் நிலத்தில்பேரிடத்தைக் கவர்தல். இறுதியில் நின்ற"கலம்" - மரக் கலம், ஈற்றடியில்,'ஆன்மாக்கள்' என்பது முதற் குறைந்து,"மாக்கள்" என நின்றது. தனம் - பொருள்.ஆன்மாக்கள் யாவும் அடையத் தக்க பொருள் வீடுபேறு, 'அது, நித்தியத்துவத்தை உணர்த்தும்தலைமாலைகளையும், எல்லாம் வல்ல தன்மையைஉணர்த்தும் மேரு வில்லையும், ஞானோபதேசத்தைக்குறிக்கும் ஆல் நிழலையும் உடையோனாகியசிவபெருமானை முதல்வனாக உணர்ந்துபோற்றாதவர்க்குக் கிடைக்க மாட்டாது' என்றபடி.

**கையா றவாவெகுளி அச்சங் கழிகாமம்**
**கையாறு செஞ்சடையான் காப்பென்னும் - கையாறு**
**மற்றிரண்ட தோளானைச் சேர்நெஞ்சே சேரப்போய்**
**மற்றிரண்ட தோளான் மனை.** 38

(குறிப்புரை): - "நெஞ்சே" என்பதை முதலிலும், "சேரப்போய்" என்பதை, "மனை" என்பதற்குப்பின்னும் கூட்டி யுரைக்க. "கையாறு" இரண்டில் முன்னது செயல் அறுதி. அது மிகுதுயரைக்குறிக்கும். கழிகாமம் - அளவிறந்த காமம். கை ஆறுசெஞ்சடை - பல பக்கங்களிலும் சுழலுகின்ற சிவந்தசடை. 'கையாறு முதலிய ஐந்தும் சிவபெருமானால்தடுக்கப்படும் - என நூல்களில் சொல்லப்படும்'என்பது முதல் இரண்டடியின் பொருள், கை ஆறு மல்திரண்ட தோளான் - வெகுண்டு வந்த கங்கையின் வலிமை பொருந்திய பல அலைகளால்துளைக்கப்படாதவன். 'ஆகாயத்தினின்றும் வீழ்ந்தகங்கையை வருத்தம் இன்றித் தாங்கினான்' என்றபடிமற்று இரண்ட தோளான் - (தேவர் பலர்க்கும்பொதுவாய் அமைந்த நான்கு தோள்களினும் வேறுபட்டஇரட்டிப்பான தோள்களை (எட்டுத்

தோள்களைஉடையவன். அவனது மனையாவன திருக்கோயில்கள். 'சிவபெருமானது திருக்கோயிலை அடைந்து அவனைவணங்கினால், கையாறு முதலியவைகளுக்கு அஞ்ச வேண்டா' என்பதாம். மூன்றாம் அடியில் "திரண்ட"என்பதும், ஈற்றடியில் "இரண்ட" என்பதும்அன்பெறா அகர ஈற்று அஃறிணைப் பன்மை வினையாலணையும் பெயர்கள்.

**மனையாய் பலிக்கென்று வந்தான்வண் காமன்**
**மனையா சறச்செற்ற வானோன் - மனையாய**
**என்பாவாய் என்றேனுக் கியானல்லேன் நீதிருவே**
**என்பாவாய் என்றான் இறை.** 39

(குறிப்புரை): - வண் காமன் மன் ஐ ஆசு அறச் செற்ற வானோன் - வளவிய, மன்மதனது அழகியஉடம்பை, அவனது குற்றம் நீங்குதற் பொருட்டு அழித்தஇறைவன். மனை - எனது இல்லத்தில். ஆய் பலிக்கு என்றுவந்தான் - 'பல இடங்களிலும் சென்று ஏற்கும்பிச்சைக்கு' என்று சொல்லி வந்தான் (அவனை யான்கண்டு) 'மன் ஐயாய என்பாவாய்' என்றேன் - (உன்உடம்பு முழுதும்) 'நிலையான தலைமையை உணர்த்துவனவாகிய என்பாய் உள்ளவனே' என்றேன். (அதற்கு) இறை - அவன். திருவே என் பாவாய் - 'திருமகளே' என்றுசொல்லத் தக்க பாவையே. (பெண்ணே 'என்பு ஆவாய்' எனநான் கூறியதை, 'என் பாவாய்' எனக் கூறியதாகவைத்து,) யான் அல்லேன்; நீ; என்றான் - நான் பாவையல்லேன்; (பெண்ணல்லேன்; ஆன்.) 'நீதான்பாவை' என்றான்.

'என்னே அவனது சொல்திறம்' என்பதுகுறிப்பெச்சம். குற்றமாவது சிவாபாரதம்.'முன்னர்த் திருமேனியழகில் ஈடுபட்டவளாய்த் தன்உள்ளத்தைப் பறிகொடுத்தவள், பின்பு அவன்சொல்திறத்தில் ஆழ்ந்துவிட்டாள்' என்பது கருத்துஇதுவும் காதலித்தாள் ஒருத்தியது கூற்று.

**இறையாய வெண்சங் கிவைதருவேன் என்னும்**
**இறையாகம் இன்றருளாய் என்னும் - இறையாய்**
**மறைக்காட்டாய் மாதவனே நின்னுருவம் இங்கே**
**மறைக்காட்டாய் என்னும்இம் மாது.** 40

(குறிப்புரை): - "இம்மாது" என்பதை, தனிச் சீரில் உள்ள"இறையாய்" என்பதற்கு முன்னர்க் கூட்டிப்பின்பு அது முதலாக, "மாதவனே" என்பது ஈறாகஉள்ளவற்றை முதலில் வைத்து உரைக்க. "இறை" -இரண்டில் முன்னது கை; பின்னது சிறிது. ஆகம் - மார்பு.'இறையான்' என்பது விளி யேற்று, "இறையாய்" எனவந்தது மறைக்காடு

தலம். மாதவன் - பெண்ணைஉடம்பிலே உடையவன். இங்கே மறைக் காட்டாய் - இவ்விடத்தில் மறைவான ஓர் இடத்தில் காட்டு,"என்னும்" என்பதைப் பல முறை கூறியது. 'இவ்வாறுஇவள் பிதற்றுகின்றாள்' என்றற்கு. இதுவும்காதற்பட்டாள் ஒருத்தி கூற்று.

**மாதரங்கந் தன்னரங்கஞ் சேர்த்தி வளர்சடைமேல்**
**மாதரங்கக் கங்கைநீர் மன்னுவித்து - மாதரங்கத்**
**தேரானை யூரான் சிவற்காளாஞ் சிந்தனையே**
**தேரானை யூரானைத் தேர். 41**

(குறிப்புரை): - மாதர் அங்கம் - உமாதேவியதுஉடம்பு. மா தரங்கம் - பெரிய அலைகளையுடைய. மாதுஅரங்கத் தேர் ஆனை .ஊரான். அழகிய பொதுஇடங்களில் ஊர்தியாக யானையை ஊராதவன்,(இடபத்தையே ஊர்பவன்) என்றபடி. 'தேராக என ஆக்கம் வருவிக்க. ஈற்றடியில் உள்ள "தேர்" இரண்டில்முன்னது, 'தெளி' என்னும் பொருட்டு. 'சிவனுக்கு ஆளாக எண்ணுகின்ற எண்ணமே நல்லெண்ணம்' எனத்தெளிவாயாக - என்றபடி. பின்னது, (தெளிந்த வண்ணமே) 'சிந்தனை செய்' என்பதாம். இரண்டும் ஏவல்வினைமுற்றுக்கள். ஈற்றடியில் உள்ள "ஆனைஊரான்" என்றது, 'திருவானைக்கா' என்னும்தலத்தில் இருப்பவன் என்றதாம்.

**தெருளிலார் என்னாவார் காவிரிவந் தேறும்**
**அருகில் சிராமலையெங் கோமான் - விரியுலகில்**
**செல்லுமதில் மூன்றெரித்தான் சேவடியே யாம்பரவிச்**
**செல்லும்எழில் நெஞ்சே தெளி. 42**

(குறிப்புரை): - ('தேர்' என்பதுகுறுக்கம் பெறின் 'தெரு' எனவரும் ஆகலின்"தெருள்" என்பது அந்தாதியாயிற்று.) அருகு -அண்மையிடம். விரி உலகம் செல்லும் மதில் - விரிந்த உலகம் எங்கும் செல்லக் கூடிய மதில்கள். ஈற்றடியில் "செல்லும்" என்றது. 'நமது ஒழுக்கம் பெரியோர்களது அவையில் ஏற்கப்படும்' என்றதாம்."எழில் நெஞ்சே" என்பதை முதலிற் கொள்க.

**தெளியாய் மடநெஞ்சே செஞ்சடையான் பாதம்**
**தெளியாதார் தீநெறிக்கட் செல்வர் - தெளியாய**
**பூவார் சடைமுடியான் பொன்னடிக்கே ஏத்துவன்நற்**
**பூவாய வாசம் புனைந்து. 43**

(குறிப்புரை): - தனிச்சீரில், "தெளி ஆய்" என்பதில் 'தெளி' என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஆகுபெயராய், அதனையுடைய நீரைக் குறித்தது. "பூ"

இரண்டில்முன்னது அழகு; பின்னது மலர். "பாசம்" என்பதும் ஆகுபெயராய் அதனையுடைய பொருளைக் குறித்தது."அடிக்கே" என்னும் நான்கனுருபை இரண்டனுருபாகத் திரிக்க. புனைதல் - சூட்டுதல். 'புனைந்து ஏத்துவன்' என்க.

**புனைகடற்குப் பொன்கொடுக்கும் பூம்புகார் மேயான்**
**புனைகடுக்கை மாலைப் புராணன் - புனைகடத்து**
**நட்டங்கம் ஆட்டயரும் நம்பன் திருநாமம்**
**நட்டங்க மாட்டினேன் நக்கு.** **44**

(குறிப்புரை): - முதல் அடியில்,'புன்னை' என்பது இடைக்குறைந்து 'புனை' என வந்தது. இதுநெய்தல் நிலக் கருப்பொருள். இதன் பூவின்மகரந்தம் பொன்போலுதலால், இதனை உதிர்த்தல்கடலுக்குப் பொன் சொரிதல்போல உள்ளதாம்.கடுக்கை - கொன்றை. புராணன் - பழையோன். புனைகடத்து - அழகிய குடமுழா ஓசையுடன். நட்டம் கம் ஆடும்.நடனத்தை சிதாகாசத்தில் ஆடுதலைச் செய்யும்.சிதாகாசம் சிதம்பரமாகிய தலத்தையும் குறிக்கும்.திருநாமம் நட்டு - திருப்பெயரை (உள்ளத்திலும், நாவிலும்) இருத்தி. நக்கு - மகிழ்ந்து. அங்கம்ஆட்டினேன் - உடம்பை ஆனந்தக் கூத்து ஆடச்செய்தேன். 'இனி எனக்கென்ன குறை' என்பதுகுறிப்பெச்சம்.

**நக்கரை சாளும் நடுநாளை நாரையூர்**
**நக்கரை வக்கரையோம் நாமென்ன - நக்குரையாம்**
**வண்டாழங் கொன்றையான் மால்பணித்தான் மற்றவர்க்காய்**
**வண்டாழங் கொண்டான் மதி.** **45**

(குறிப்புரை): - நக்கு அரைசு ஆளும்நடுநாளை - (பேய்கள்) சிரித்துக் கொண்டு ஆட்சிபுரிகின்ற பாதியிரவில். இதன்பின் 'வந்து' என ஒருசொல் வருவிக்க. நாரையூர் நக்கர் - 'திருநாரையூர்'என்னும் தலத்தில் உள்ள சிவபெருமான் (உண்மையைக் கூறாமல்) நாம் ஐவக்கரையோம் என்ன நக்கு - 'நாம்அழகிய 'திருவக்கரை' என்னும் தலத்தில் உள்ளோம்' என்று (பொய்யாக கூறி) நகைக்கவும். உரையாம் - அவரைநாம் ஒன்றும் இகழவில்லை. (அங்ஙனமாகவும்) வண்டுஆழ் அம் கொன்றையான் மால் பணித்தான் - வண்டுகள் தேனில் மூழ்கிக் கிடக்கின்ற கொன்றை மாலையை அணிந்தநாரை யூரான் (அம்மாலையைத் தாராமல்) மயக்கத்தைக் கொடுத்துப் போயினான். (அதனால் இவள்) மதிவண் தாழம் கொண்டாள் - அறிவு அவனிடத்தை தங்குதலை அடைந்தாள். 'கொண்டான்' என்பது பாடமன்று, தாழ்தல் - தங்குதல். "தாழம்", அம் ஈற்றுத் தொழிற் பெயர்.எள்ளல் பற்றிப் பன்மையில் ஒருமை மயங்கிற்கு. இதுசெவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

**மதியால் அடுகின்ற தென்னும்மால் கூரும்**
**மதியாதே வைதுரப்பர் என்னும் - மதியாதே**
**மாதெய்வம் ஏத்தும் மறைக்காடா ஈதேகொல்**
**மாதெய்வம் கொண்ட வனப்பு.** 46

(குறிப்புரை): - "மறைக்காடா" என்பதை முதலிலும், "ஈதேகொல்" என்பதை இறுதியிலும் கூட்டியுரைக்க. முதற்கண் உள்ள மதி,' சந்திரன். ஆல்,அசை. தனிச்சீரில் 'அஃதியாதே' என்பது. ஆய்தம்தொகுக்கப்பட்டு, 'அதியாதே' எனவந்தது. 'வைதுஉரைப்பர்; அஃதியாதே' எனக் கூட்டுக. வைதுரைப்பார்செவிலியும், நற்றாயும். அஃதியாதே - அஃது"ஏத்தும்" என்னும் பெயரெச்சம். என்ன முறைமை."மறைக்காடன்" என்பத னோடு முடிந்தது.ஈற்றடியில் உள்ள மாது, தலைவி. அதன்பின், 'எய்ப்பு'என்பது, "எய்வு" என வந்தது. 'இவளதுஎய்ப்புக்குக் காரணமான உனது வனப்பின் தன்மைஈதோ' என்க. 'இனி நீ வரைதல் இன்றியமையாதது'என்பது குறிப்பெச்சம். ஏகாரம் வினாப் பொருட்டு.கொல். அடை. அம் கொண்ட வனப்பு - இவளது அழகைக்கொள்ளை கொண்ட உனது அழகு. இது தோழி வரைவு கடாயது.

**வனப்பார் நிறமும் வரிவளையும் நாணும்**
**வனப்பார் வளர்சடையான் கொள்ள - வனப்பாற்**
**கடற்றிரையு மீருமிக் கங்குல்வா யான்கட்**
**கடற்றிரையு மீருங் கனன்று.** 47

(குறிப்புரை): - முதற்கண் உள்ளவனப்பு, அழகு. இரண்டாம் அடியில் வனம், காடு, 'பரிய'எனப் பொருள் தரும். "பார்" என்பது 'திரண்ட'என்னும் பொருளைத் தந்தது. வனப்பால் - நீரின்கண்உள்ள (திரை) என்க. ஈற்றடியை, 'கடற்று + இரை'எனப்பிரித்து, 'கடற்று ஆன்கண் இரையும் ஈரும்' எனஇயைக்க. கடறு - காடு; என்றது முல்லை நிலத்தை ஆன் -ஆனிரை. இரை - இரைச்சல், 'இக்கங்குல்வாயக் கடல்வனப்பால் திரையும் ஈரும்; கடற்று ஆன்கண் இரையும்கனன்று ஈரும்' என முடிக்க. இது கைக்கிளைத் தலைவிமாலைப் பொழுதின்கண் தனிப்படர் மிக்குக்கூறியது. கங்குல், இங்கு மாலைக் காலத்தைக்குறித்தது.

**கனன்றாழி நன்னெஞ்சே கண்ணுதலார்க் காளாய்க்**
**கனன்றார் களிற்றுரிமால் காட்டக் - கனன்றோர்**
**உடம்பட்ட நாட்டத்தர் என்னையுந்தன் ஆளா**
**உடம்பட்ட நாட்டன் உரு.** 48

(குறிப்புரை): - முதற்கண் உள்ள" கனன்று" என்பதை, 'கல் + நன்று' எனப்பிரித்து, 'நன்று கல்' என மாற்றி, இறுதியில் வைத்துஉரைக்க. ஆழி - (கவலையில்)

ஆழ்தலை உடையது. கனன்றுஆர் களிறு - கோபித்து ஆர்ப்பரித்த யானை; கயாசுரன். (யானைத் தோலின் போர்வைதன்னிடத்தில்) மால் காட்ட - மாயோனதுநிறத்தைக் காட்ட. கனன்றோர் - மற்றும் பகைவர்சிலர். உடம்பு அட்ட நாட்டத்தன் - உடம்பை அழித்தநாட்டத்தன், "நாட்டம்" என்பது இரட்டுற மொழிதலாய், 'கண்' எனவும், 'கருத்து' எனவும் இருபொருள் தந்து. மன்மதன், திரிபுரத்தசுரர் ஆகிய இரு திறத்தினர்க்குப் பொருந்திற்று. "கனன்றார்" என்பது பொதுப்பட, 'பகைத்தவர்' என்னும் அளவாய் நின்றது. ஆளா உடம்பட்ட நாள் - தொண்டனாக ஏற்றுக்கொண்ட நாள். 'நாளில் காட்டியதன் உரு' என விரித்து. 'அதனை நன்று கல்' என முடிக்க. நன்று கற்றலாவது, வருணிக்கவும், புகழவும் வன்மை எய்துதல், "உடம்பட்ட நாள் தன் உரு" என்றதனால், இவ்வாசிரியர் இறைவனால் எவ்வகையிலோ ஆட்கொள்ளப்பட்டமை விளங்கும்.

**உருவியலுஞ் செம்பவளம் ஒன்னார் உடம்பில்**
**உருவியலுஞ் சூலம் உடையன் - உருவியலும்**
**மாலேற்றான் நான்முகனும் மண்ணோடு விண்ணும்போய்**
**மாலேற்றாற் கீதோ வடிவு.** 49

(குறிப்புரை): - உரு இயலும் - உடம்பின் நிறமும்; உடம்மை சிறப்பு. இரண்டாம் அடியில் 'இயலும்' முதற் குறைந்து வந்தது. இயலும் - போகின்ற. உரு இயலும் மால் ஏற்றான் - அழகாக நடக்கின்ற பெரிய இடப உருவத்தை உடையவன்; திருமால், இங்கும் எண்ணும்மை விரிக்க, மால் ஏற்றாற்கு - மயக்கத்தை ஏற்பதற்குக் காரணமாய் இருந்தவனுக்கு; இருந்தவன் சிவபெருமான். 'வடிவு ஈதோ 'என்க. ஓகாரம் வியப்பு.

**வடிவார் அறப்பொங்கி வண்ணக்கச் சுந்தி**
**வடிவார் வடம்புனைந்தும் பொல்லா - வடிவார்மேல்**
**முக்கூடல் அம்மா முருகமருங் கொன்றையந்தார்**
**முக்கூட மாட்டா முலை.** 50

(குறிப்புரை): - உந்தி வடிவார் அறப் பொங்கு வண் கச்சு (புனைந்தும்) - உந்தியின்மேல். நீண்டு தொங்குகின்ற வார் போலவே மிக விளங்குகின்ற கச்சினை (பாம்பாகிய கச்சினை)ப் புனைந்தும். பின்னர், "புனைந்தும்" என்றதற்கு,'மார்பில் புனைந்தும்' என உரைக்க. வடம் -தலைமாலை. வடிவு ஆர் வடம் - அழகு நிறைந்த வடம்,"புனைந்தும்" என்பது முன்னரும் சென்றி யைந்தது.வடிவு ஆர் வேல் - கூர்மை பொருந்திய படைக்கலம்; சூலம், முற் கூடல் - தலங்களில் முன்னிற்பதாகியமதுரை, இதனை, "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி[1]என்னும் அப்பர்

வாக்கினாலும் அறிக, இனி மடக்கணி கருதாது, 'முக்கூடல்' என்பது பாடமாயின், 'திரிகூடமலை' என்க. அவ்வாறன்றி, 'முக்கூடல் வேர் திரிசூலம்' என்றலும் ஆம். தார் - போக காலத்தில் மார்பில் அணியும் மாலை,'அதனைக் கூட மாட்டா' என்றதனால், 'மார்பை அணையப் பெறவில்லை' என்றதாயிற்று. முருகு - நறுமணம். 'தேனும்'ஆம் முலை கூடமாட்டா' என்க. "மாட்டா" என்றது,'மாட்டாமை யுடையனவாய் வருந்துகின்றன' என்படி இவைகளைப் பெருமையால் பெண்மை நலம் வாயாதோர் பலர் இருக்க. யாம் இவைகளைப் பெற்றும் பயன் என்னை' என்பது குறிப்பெச்சம் இதுவும் கைக்கிளைப்பட்ட தலைவி கூற்று.

**முலைநலஞ்சேர் கானப்பேர் முக்கணான் என்னும்**
**முலைநலஞ்சேர் மொய்சடையான் என்னும் - முலைநலஞ்சேர்**
**மாதேவா என்று வளர்கொன்றை வாய்சோர**
**மாதேவா சோரல் வளை.** **51**

(குறிப்புரை): - "முலை" மூன்றில் முன் இரண்டும் 'முல்லை' என்பதன் இடைக்குறை. அவற்றுள் முன்னது முல்லை நிலம், 'கானப்பேர்த் தலம்' முல்லை நிலத்தில் உள்ளது' என்றபடி பின்னது கற்பு, 'கற்பு நலம்' என்பது அதனையுடைய பெண்ணை - கங்கா தேவியைக் குறித்தது. "மாதேவா" இரண்டில் முன்னது இருமொழித்தொடர். 'பெண்ணே, வா' என்பது அதன் பொருள் பின்னது சிவபிரானை 'மாதேவா' என விளிக்கும் விளி. இவற்றுள் பின்னின்ற "மாதேவா" என்பதை முதலிற் கொள்க. "என்னும்; என்னும்" என்பன தன்னை யறியாமலே பலவற்றைச் சொல்லுதல். 'வாய்சோர என்னும்' என இயைக்க. இவளை நீ, 'நலம் சேர்மாத, வா' என்று அழைத்து, நின் வளர் கொன்றை காரணமாக வளை சோர்தலை நீக்கு' என முடிக்க. "கொன்றை" என்பதில் தொக்கு நின்ற 'ஆன்'உருபு. 'அது காரணமாக' என்னும் பொருளது. தன்வினை, பிறவினை இரண்டிற்கும் பொதுவாம் "சோரல்" என்பது இங்குப் பிறவினைக் கண் வந்தது. இது தோழி மாலை யிரந்தது. "முலைநலஞ்சேர்" என்னுந் தொடர் மீள மீளவந்து, பொருள் வேறுபட்டது சொற்பின்வருநிலையணி

1. திருமுறை- 6.19.1.

**வளையாழி யோடகல மால்தந்தான் என்னும்**
**வளையாழி நன்னெஞ்சே காணில் - வளையாழி**
**வன்னஞ்சைக் கண்டமார் வாய்சோர வந்தெதிர்ந்த**
**வன்னஞ்சக் கண்டன் வரில்.** **52**

(குறிப்புரை): - 'ஆழிநன்னெஞ்சே, வளை ஆழி வன்னஞ்சைக் கண்டு அமரர்வாய்சோர வந்து எதிர்ந்த வன்னஞ் சக்கு அண்டன்காணில் ஆழி வளையோடு அகல மால் தந்தான்; வரில்வளை' - என்னும் - என இயைத்து முடிக்க. "ஆழி" மூன்றில் முதலது மோதிரம்; இடையது, துன்பத்துள்ஆழ்தலை யுடையது, இறுதியது கடல், "வளை" மூன்றில் முதலது மோதிரம்; இடையது, துன்பத்துள் ஆழ்தலை யுடையது, இறுதியது. கடல், "வளை"மூன்றில் முதலது வளையல் இடையது, "வளைத்துக்கொள்" என முற்று, இறுதியது 'வளைந்த' (பூமியைச்சூழ்ந்த) என வினைத் தொகை. காணில் -காட்சியளவில் வன்னம் - ஒளி. சக்கு (சட்சு) - கண்,ஒளியான கண் - 'ஞாயிறு திங்கள், தீ' என்பனவாய் அமைந்த கண்கள். அண்டன் - தேவன் 'வந்தெதிர்ந்த அண்டன்' என்க. என்னும் - என்று என் தோழிபிதற்றுகின்றாள். இது தலைவியை ஆற்றுவிக்கும்தோழி கூறியது.

**வரிநீல வண்டலம்பு மாமறைக்காட் டங்கேழ்**
**வரிநீர் வலம்புரிகள் உந்தி - வரிநீர்**
**இடுமணலமேல் அந்நலங்கொண் டின்னாநோய் செய்தான்**
**இடுமணல்மேல் ஈசன் எமக்கு. 53**

(குறிப்புரை): - ஈற்றடியை முதலிற் கொள்க.அந்த அடியில், "மேல் ஈசன்" என்பது 'மேலாயசிவன்' என்னும் பொருளது, இடும் அணல் ஈசன் - (எமக்குஎல்லாவற்றையும்) தருபவனாகிய ஈசன்; 'இது பொழுதுநோய் செய்தான்' என்பதாம். "வரி" மூன்றில்முன்னது அழகு. இடையது, கீற்று இறுதியது 'வாரி' என்பதுகுறுகிநின்றது, வாரி - கடல். "நீர்" இரண்டில்முன்னது நீர்மை; பின்னது தண்ணீர். அம் நலம் -அழகினால் உண்டாகின்ற இன்பம். 'இடு மணல் மேல்நலங் கொண்டான்' என்பது கைக்கிளைத் தலைவி தான்கண்ட கனவைத் தோழிக்குக் கூறியது.

**அக்காரம் ஆடரவம் நாண்அறுவை தோல்பொடிசாந்**
**தக்காரம் தீர்ந்தேன் அடியேற்கு - வக்காரம்**
**பண்டரங்கன் எந்தை படுபிணஞ்சேர் வெங்காட்டுப்**
**பண்டரங்கன் எங்கள் பவன். 54**

(குறிப்புரை): - முதல் அடியில் உள்ள"அக்கு" - எலும்பு ஆரம் - ஒளிமணிவடம். நாண் -அரைநாண். அறுவை - துணி; உடை பொடி - சாம்பல். சாந்து - சந்தனம். 'ஆரம் அக்கு;நாண் அரவம்; அறுவை தோல்; சாந்து பொடி' - என்க.இரண்டாம் அடியில் உள்ள அக்காரம் - அந்த வெறுப்பு.அஃதாவது, 'மாலை எலும்பு, சாந்து சாம்பல்' என்பனபோல இகழ்தல். 'காரம் தீர்ந்தேன் ஆகையால்,அடியேனுக்கு அவன்

அக்காரம் (சருக்கரை) என்க."சாந்து" என்பதன்பின், 'என்னும்' எனஒருசொல் வருவிக்க. "பண்டரங்கன்" இரண்டில்முன்னது, ஒருவகைக் கூத்து. பின்னது, பழமையான நடனஅரங்கம். 'வெங்காடாகிய பழைய அரங்கிணைஉடையவன்' என்க. "பவன்" என்பது சிவபெருமானதுதிருப்பெயர்களுள் ஒன்று.

**பவனடிபார் விண்நீர் பகலோன் மதிதீப்**
**பவனஞ்சேர் ஆரமுதம் பெண்ஆண் - பவனஞ்சேர்**
**காலங்கள் ஊழி அவனே கரிகாட்டிற்**
**காலங்கை ஏந்தினான் காண்.** 55

(குறிப்புரை): - கரி காடு -கரிந்த காடு; சுடுகாடு, "கால் அங்கைஏந்தினான்" என்றது, 'ஊர்த்துவ தாண்டவம் ஆடினான்' என்றபடி. "அவனே" என்பதை இதன்பின்பின்னும் முதல் அடியில் "பவனடி" ஒழிந்தவற்றை அதற்குப் பின்னும் கூட்டி, "காண்" என்பதை அசையாக்கியும், "பவன் அடி பார்" என்பதை வேறுமுடிபாக வைத்தும் உரைக்க. பவன் - சிவன்சிவபெருமான் அனைத்துப் பொருள்களும் தானாகியும்,பூமியே திருவடியாகக் கொண்டும் விளங்குதலைக்கூறியவாறு. இரண்டாம் அடி முதற்கண் உள்ள பவனம், தேவலோகம், ஈற்றில் உள்ள பவனம், மேடம், இடபம்முதலிய இராசிகள்.

**காணங்கை இன்மை கருதிக் கவலாதே**
**காணங்கை யாற்றொழுது நன்னெஞ்சே - காணங்கை**
**பாவனையாய் நின்றான் பயிலும் பரஞ்சோதி**
**பாவனையாய் நின்ற பதம்.** 56

(குறிப்புரை): - காணம் -பொற்காசு. கவலாது - கவலைப் படாமல். ஏகாரம்,தேற்றம். 'அங்கையால் தொழுது காண்' என மாற்றுக.காண் நங்கை - தன்னைக் கண்டு வழிபட்ட உமாதேவி. 'அவள்பாவிக்கப்படும் பொருளாய் நின்றான்' என்க. ஈற்றடியில் உள்ள "பாவனை" என்பதை, 'பா + வனை' என பிரிக்க. பா - பாமாலை. வனைதல் - ஆக்குதல். 'பதத்துக் கண்' என ஏழாவது இறுதிக்கண் தொக்கது. நின்ற பதம் - நிலையான பாதங்கள். நிலையாவது, அடைந்தார் பின் நீங்காமை.

**பதங்க வரையுயர்ந்தான் பான்மகிழ்ந்தான் பண்டு**
**பதங்கன் எயிறு பறித்தான் - பதங்கையால்**
**அஞ்சலிகள் அன்பாலும் ஆக்குதிகாண் செஞ்சேகூர்ந்**
**தஞ்சலிகள் அன்பாலும் ஆக்கு.** 57

(குறிப்புரை): - பதங்கம் -பறவை. அது கருடனைக் குறித்தது. வரை - மலை, கருடனாகியமலைமேல். உயர்ந்தான் - ஏறி வருபவன்; மாயோன்.பால் - அவனது பாகத்தை. மகிழ்ந்தான் -தன்பாகத்தில் இருக்க விரும்பினவன். பதங்கன் -சூரியன். சூரியன் தக்கன் வேள்வியில் பல்உதிர்க்கப்ட்டான் அவனது பதம் - பாதங்களில், நெஞ்சே, அன்பாலும் கூர்ந்து அஞ்சலிகள் (கும்பிடுகள்) ஆக்குதி; (அதனால்) என்பாலும் நீஅஞ்சலிகள் (அஞ்சாமைத் தன்மைகளை) ஆக்கு.அஞ்சப்படும் பொருள்கள் பலவாகச்சொல்லப்பட்டன. 'சிவபெருமானைத் தொழுதால் நாம்எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை' என்பது கருத்து, "சுண்ணவெண் சந்தனச் சாந்தும். உடையார் ஒருவர்தமர் நாம் - அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்சவருவதும் இல்லை"[1], "நாம் ஆர்க்கும்குடியல்லோம்; நமனை யஞ்சோம்"[2] என்னும் அப்பர்திருமொழிகளையும் "அச்சம் இலர்; பாவம் இலர்; கேடும் இலர்....கொன்றை நயந்தாளும் - பச்சம்முடைஅடிகள் திருப்பாதம் பணிவாரே"[3]என்னும்திருஞானசம்பந்தர் திருமொழியையும் காண்க. காண்,முன்னிலை யசை. என்பாலும் - என்னிடத்திலும்.

**ஆக்கூர் பனிவாடா ஆவிசோர்ந் தாழ்கின்றேன்**
**ஆக்கூர் அலர்தான் அழகிதா - ஆக்கூர்**
**மறையோம்பு மாடத்து மாமறையோ நான்கு**
**மறையோம்பு மாதவர்க்காய் வந்து.** **58**

(குறிப்புரை): - "ஆக்கூர்" மூன்றில் முதலது, "ஆக்கு ஊர் பனி'எனப் பிரிந்து, 'பொழிகின்ற, உலகை மறைக்கின்றபனி' எனப் பொருள் கொள்ளுதற்கு உரியது. இயைடது,ஊர் ஆக்கு அவர் - ஊரார் தூற்று பழி. இறுதியது, 'திருஆக்கூர்'த் தலம். மாடம் - மாடக் கோயில்.மறை ஓம்பு மாடம் - காவல் செய்கின்ற மாடம். மாமறையோன், சிவபெருமான், ஈற்றடியில் உள்ள மறை, வேதம் மாதவர், அந்தணர். வந்து - வந்ததனால் 'திருஆக்கூர்ப் பெருமான் அங்குள்ள அந்தணர்களுக்கு அருள்புரிய வேண்டி வீதியில் வந்ததனால் நான்பனியால் வாடி ஆவி சோர்ந்து ஆழ்கின்றேன்' எனக்கைக் கிளைத் தலைவி கூற்றாக உரைத்துக் கொள்க. [1. திருமுறை - 4.2.1.; 2. திருமுறை - 6.98.1; 3. திருமுறை - 1.18.1.]

**வந்தியான் சீறினும் ஆழி மடநெஞ்சே**
**வந்தியா உள்ளத்து வைத்திராய் - வந்தியாய்**
**நம்பரனை யாடும் நளிர்புன் சடையானை**
**நம்பரனை நாள்தோறும் நட்டு.** **59**

(குறிப்புரை): - மூன்றாம்அடியில் 'நம்பு + அரனை' எனப் பிரிக்க. நம்புதல் - விரும்புதல். அரனை, சடையானை, பரனை (அவன்)வந்தியாய் வந்த பொழுது யான் சீறினும் நெஞ்சே(நீ அவனை) நாள்தோறும் நட்டு நட்புக் கொண்டுவந்தியா (வந்தித்து - வணங்கி) உள்ளத்து வைத்திராய்' என இயைத்து முடிக்க. தனிச் சீரில்உள்ல "வந்தி" - மங்கலமாகப் படுபவன்.'வந்தியாய் வந்து' என முன்னே கூட்டுக. "வந்து"என்பதனை, 'வர' எனத்திரித்துக் கொள்க. 'ஆற்றாமைகாரண மாக எனக்குச் சீற்றம் எழலாம்; ஆயினும் நீ அவனை வெறாதே' எனத் தலைவி தன் நெஞ்சிற்கு அறிவுறுத்தினாள். வாழி, முன்னிலை யசை.

**நட்டமா கின்றன வொண்சங்கம் நானவன்பால்**
**நட்டமா நன்னீர்மை வாடினேன் - நட்டமா**
**டியான் எரியாடி எம்மான் இருங்கொன்றை**
**ஈயானேல் உய்வ திலம்.** 60

(குறிப்புரை): - நட்டம் ஆகின்றன இழப்பு ஆகின்றன. சங்கம் - சங்க வளையல்.நட்ட மா நன்னீர்மை - நட்புக் கொண்ட பெரிய,நல்ல இயல்பு. 'நன்னீர்மையால்' என உருபு விரிக்க.நட்டம் ஆடியான் - நடனம் ஆடுபவன். 'ஆடியான்' என்பது நீட்டல் பெற்றது. "இலம்" என்னும் பன்மை இரக்கக் குறிப்புணர்த்தி, "நான்" என்ற ஒருமையோடு மயங்கிற்று. இதுவும் கைக்கிளைத் தலைவி தோழியை மாலையிரக்க வேண்டியது.

**இலமலரஞ் சேவடியார் ஏகப் பெறாரே**
**இலமலரே ஆயினும் ஆக - இலமலரும்**
**ஆம்பல்சேர் செவ்வாயார்க் காடாதே ஆடினேன்**
**ஆம்பல்சேர் வெண்தலையர்க் காள்.** 61

(குறிப்புரை): - மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி, "ஆடினேன்" என்பதைஇறுதிக்கண்ணும், "இலமலரே ஆயினும் ஆக"என்பதை அதன்பின்னும் கூட்டி யுரைக்க. மூன்றாம்அடியில் உள்ள "ஆம்பல்" என்பது ஆம்பலமலரின் நிறத்தைக் குறித்தது. "செவ்வாயார்"என்றதும், "சேவடியார்" என்றதும் தோழியரை.ஏகாரம் வினாப் பொருட்டு. ஆடுதல் - உரையாடுதல்.இரண்டில் முன்னது வெளிப்படுத்துதலையும், பின்னதுஅளவளாவுதலையும் குறித்தன. ஈற்றடியில் "ஆம்"என்பதில் 'ஆளாய்' என ஆக்கம் விரிக்க. முதலடியின் முதலில் 'இலவு' என்பது உகரம் இன்றிவந்தது. இலவ மலர், சிவப்பு நிறம் உடையது. ஆதலின்சேவடிக்கு உவமையாயிற்று. இரண்டாம் அடியில் உள்ள"இலம்" - இல்லம்; அஃதாவது குடிமை, அலர் ஆதல் -பழிச் சொல்லுக்கு உள்ளாதல். 'தோழியர்க்குஉரையாமலே யான்

வெண்டலையர்க்கு ஆளாய்அளவளாவினேன்; அதன்மேலும் நமது குடி பழிச்சொல்லுக்கு உள்ளாவதாயினும் ஆகுக. சேவடியார்(இறைவர்பால்) தூது ஏகப்பெறாரோ? (பெற்றால் யாதும்உய்வேன்.) யாவரும் பிறர் தூற்றும் பழியைஇலமாவோம்' என இயைத்து முடிக்க. இதுவும் மேலைத்துறை.

**ஆளானம் சேர்களிறும் தேரும் அடல்மாவும்**
**ஆளானார் ஊரத்தான் ஏறூரும் - தாளான்பொய்**
**நாடகங்கள் ளாட்டயரும் நம்பன் திருநாமம்**
**நாடகங்கள் ஆடி நயந்து.** **62**

(குறிப்புரை): - ஆளான் அஞ்சுஏர் களிறு - மனிதரால் அஞ்சப்படுகின்ற, அழகியயானை. மா - குதிரை. ஆள் ஆனார் - தனக்கு அடியர்ஆயினார். பொய் ஆளான் - ஒரு ஞான்றும் பொய்யைப்பயன்படுத்தாதவன்; 'வாய்மையையே உடையவன்'என்றபடி. நாடகங்கள் - பலவகை நடனங்கள். நாடுஅகங்கள் - நினைக்கின்ற மனங்கள். ஆடி - கண்ணாடிபோலத் தூய்மையைப் பெறும். 'ஆடி ஆம்' என ஒரு சொல்வருவிக்க, நயந்து - விரும்பி. நயந்து 'நாடு அகங்கள் 'எனக் கூட்டுக. 'ஏறூருந் தாளான்' என்பது பாடம் அன்று.

**தான்நாளும் பிச்சை புகும்போலும்,தன் அடியார்**
**வான்ஆள, மண்ஆள வைத்து**

என நக்கீர தேவரும்[1] அருளிச் செய்தார்.

**நயந்தநாள் யானிரப்ப நற்சடையான் கொன்றை**
**நயந்தநாள் நன்னீர்மை வாட - நயந்தநாள்**
**அம்பகலஞ் செற்றான் அருளான் அநங்கவேள்**
**அம்பகலம் பாயும் அலர்ந்து.** **63**

(குறிப்புரை): - நய் அந்த நாள்நன்னீர்மை வாட - வருந்து கின்ற அந்த நாட்களில்எனது நல்ல அழகெல்லாம் வாடிப் போதலால், நய்அந்த நாள் நற் சடையான் கொன்றை யான் இரப்ப -இறந்துபடுகின்ற இறுதி நாள் வந்தது போன்றநிலையில் யான் நல்ல சடைகளையுடைய சிவபெருமானதுகொன்றை மாலையை இரக்கவும், நயந்த நாள் அம்பகல் அம் செற்றான் அருளான் - அவனைக் கண்டு நான் விரும்பிய நாளாகிய அழகியநாளில் எனது அழகை அழித்துச் சென்றவன் அதனைஎனக்கு ஈயவில்லை. அநங்க வேள் அம்பு அலர்ந்தஅகலம் பாயும் - காமவேளது அம்புகள் எங்கும் பரந்துவந்து என் மார்பிற் பாயாநின்றன; (யான் இனிச்செய்வது என்!)

'நை' என்பது, 'நய்' எனப்போலியாய் வந்தது. "அந்த" இரண்டில் பின்னதுசுட்டு; முன்னது 'அந்தம்' என்பதன் புணர்ச்சிவிகாரம். இதுவும் கைக்கிளைத் தலைவி ஆற்றாமைகூறியது.

**அலங்காரம் ஆடரவம் என்புதோல் ஆடை**
**அலங்கார வண்ணற் கழகார் - அலங்காரம்**
**மெய்காட்டு வார்குழலார் என்னாவார் வெள்ளேற்றான்**
**மெய்காட்டும் வீடாம் விரைந்து.** 64

(குறிப்புரை): - "அலங்காரம்" மூன்றில், முதலது அலங்கு ஆரம் -(மார்பில்) அசையும் மாலைகள். அவை அரவமும்,எலும்புமாம். இடையது அழகு. வண்ணற்கு - நிறத்தையுடையவன் (சிவபெருமான்) பொருட்டாக. அழகு ஆர்அலங்கு ஆர மெய் காட்டும் வார் குழலார் - தங்களதுமேனி யழகு, நிறைந்த ஒளியை வீசுகின்ற முத்தின்நிறத்தைக் காட்டி நிற்கும் நீண்ட கூந்தலையுடையமகளிர் ('உடல் வெளுத்துப் போன மகளிர்'என்றதாம்.) இனி என்னாவாரே! (இவர்கட்கு இனி)ஏற்றான் மெய்காட்டும் வீடு விரைந்து ஆம் - இடபவாகனத்தையுடையவன் தனது உண்மையை விளங்குகின்றவீடு விரைவில் கிடைத்துவிடும்போலும்!('இறந்துபடுவர் போலும்' என்றபடி.)

**விரையார் புனற்கங்கை சேர்சடையான் பொன்னார்**
**விரையார் பொழிலுறந்தை மேயான் - விரையாநீ**
**றென்பணிந்தான் ஈசன் இறையான் எரியாடி**
**என்பணிந்தான் ஈசன் எனக்கு.** 65

(குறிப்புரை): - விரை ஆர் புனல் - விரைந்த(வேகமாய்) ஆர்க்கின்ற (ஒலிக்கினற) நீர்.பொன்னாவிரை - பொன் போலும் ஆவிரம் பூ. ஆர் -நிறைந்த. உறந்தை - உறையூர்; முக்கீச்சரம். நீறுவிரையா அணிந்தான் - திருநீற்றை வாசனைபொருந்திய சந்தனமாக அணிந்தவன். 'விரைவாக'என்றதற் கேற்ப, 'மாலையாக' என்பது வருவித்து,'மாலையாக என்பை அணிந்தான்" என்க. ஈற்றடியில்"ஈசன்" என்பது அவன்' எனச் சுட்டளவாய் நின்ற'அவன் எனக்குப் பணிந்தான்; என்' - என்க. எனக்கு -என் அளவிற்கு. பணிந்தான் - இறங்கி வந்து அருள்செய்தான். என் - என்ன வியப்பு.

**எனக்குவளை நில்லா எழில்இழந்தேன் என்னும்**
**எனக்குவளை நில்லாநோய் செய்தான் - இன்க்குவளைக்**
**கண்டத்தான் நால்வேதன் காரோணத் தெம்மானைக்**
**கண்டத்தான் நெஞ்சேகாக் கை.** 66

(குறிப்புரை): - இனக் குவளைக்கண்டத்தான்.... எம்மானைக் கண்ட அத்தால், (அவன்)நக்கு, வளை நில்லா நோய் என் செய்தான்? (இவள்)'எனக்கு வளை நில்லா; எழில் இழந்தேன் என்னும்;(இனி இவளைக் காக்கை நெஞ்சே' என இயைத்து உரைக்க.இனக் குவளைக் கண்டத்தான் - கூட்டமானநீலோற்பலப் பூப்போலும் கரிய கண்டத்தையுடையவன். கண்ட அத்தால் - அவனைக் கண்ட அதனாலே,'கண்ட' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.'அதனால்' என்பது 'அத்தால்' என மருவிற்று. நக்கு -சிரித்து; 'அன்பு காட்டி' என்றபடி வளை நில்லாநோய் - தாழ்ந்து நில்லாது உயர்ந்து எழுகின்றநோய், காக்கை - காத்தலைச் செய்வது. நெஞ்சுகாத்தலாவது, அவனை நினையாது மறத்தல், என்னும் -என்று சொல்லி இரங்குகின்றாள்.

**காக்கைவளை என்பார்ப்பார்க் கன்பாப்பா னையாதே**
**காக்கைவளை யென்பார்ப்பான் ஊன்குரக்குக் - காக்கைவளை**
**ஆடானை ஈருரியன் ஆண்பெண் அவிர்சடையன்**
**ஆடானை யான தமைவு.** 67

(குறிப்புரை): - முதலடியில்"காக்கைவளை" என்பதை, 'கை வளை கா' எனமாற்றுக. "கா" - கழன்று வீழாமல் காப்பாற்று.ஏவல் வினைமுற்றின்முன் வல்லொற்று மிக்கது, என்பு- என்றல்; புகர ஈற்றுத் தொழிற் பெயர். என்புஆர்ப்பார்க்கு அன்பாய் - என்பதாகச் சொல்லஆரவாரிக்கின்றவர்கள் மேல் அன்பாய். தலைவிதன்னைப் பிறர்போலக் கூறினாள் ஆதலின்,"ஆர்ப்பார்" எனப் பன்மையாற் கூறினாள்;பால் நையாது - அவர்கள்பால் மனம் இரங்காமல்ஏகாரம் தேற்றம். காக்கை வளை என்பு ஆர்ப்பான் -காக்கைகள் சூழ்கின்ற எலும்புகளை ('புறங்காட்டில்உள்ள எலும்புகளை' என்றபடி) மாலையாக அணிந்தவன்;சிவபெருமான். "குரக்குக் கா" என்பதும்ஈற்றடியில் உள்ள "ஆடானை" என்பதும்தலங்கள். கை வளை ஆடு ஆனை ஈர் உரியன் - தும்பிக்கைவளைந்து அசைகின்ற யானையை உரித்த தோலையுடையவன். ஆண் பெண் - ஆணும் பெண்ணுமாய உருவம்உடையவன். அமைவு - பொருத்தம். 'காதல் மிக்குமெலிகின்ற மகளிர், - எங்கள் கை வளைகளைக் கா -என்று முறையிடுகின்றவர்கள்மேல் அன்பாய்,அவர்பால்இரக்கங் கொள்ளாமலே சிவன்குரக்குக்கா, ஆடானை ஆகிய தலங்களில் வாளா அமர்ந்திருத்தல் பொருந்துவதொன்றே' எனத் தலைவிஇரங்கினாள். 'பொருந்துவது' என்றது எதிர்மறைக்குறிப்பு.

**அமையாமென் தோள்மெலிவித் தம்மாமை கொண்டிங்**
**கமையாநோய் செய்தான் அணங்கே - எமையாளும்**
**சாமத்த கண்டன் சடைசேர் இளம்பிறையன்**

**சாமத்தன் இந்நோய்செய் தான்.** 68

(குறிப்புரை): - அமை -மூங்கில். அம் மாமை - அழகிய, மாந்தளிர்போலும்நிறம், அமையா நோய் - தீரா நோய், சாமத்த -சாமவேதம் பொருந்திய. 'சாமத்தனாய்' என ஆக்கம்விரிக்க. சாமத்தன் - இடாயாமத்திலே வந்தவன்."அணங்கே" எனத் தோழியை தலைவிவிளித்தாள். ஆகவே, இது தோழியைத் தூது செல்லவேண்டிக்கொண்ட தலைவி கூற்றாயிற்று.

**தானக்கன் நக்க பிறையன் பிறைக்கோட்டுத்**
**தானக் களிற்றுரியன் தண்பழனன் - தானத்**
**தரையன் அரவரையன் ஆயிழைக்கும் மாற்கும்**
**அரையன் உடையான் அருள்.** 69

(குறிப்புரை): - 'தான் +நக்கன்' எனப் பிரிக்க. நக்கன் -உடையில்லாதவன்; திகம்பரன்; திக்குகளையேஆடையாக உடையவன். நக்க பிறையன். ஒளி வீசுகின்றபிறையை அணிந்தவன். கோடு - தந்தம், தானக் கயிறு -மத நீரை யுடைய யானை. தானத்து அரையன் - தானம்செய்தற்கு வேண்டப் படும் சற்பாத்திரங்களுள்முதலாவதானவன். 'சிவனை நோக்கிச் செய்யும்தானங்களை விடச் சிறந்த தானம் பிறிதில்லை'என்றபடி. ஆயிழை - உமை. மால் - மாயோன். அரையன் -இவர்களைப் பாதி உடலிற் கொண்டவன் 'அருள்உடையான்' எனமாற்றி, 'இங்ஙனம் கூறப்பட்ட இவன்உயிர்கள் மாட்டுப் பேரருள் உடையவன்' என்க.

**அருள்நம்பாற் செஞ்சடையன் ஆமாத்தூர் அம்மான்**
**அருள்நம்பால் நல்கும் அமுதன் - அருள்நம்பால்**
**ஓராழித் தேரான் எயிறட்ட உத்தமனை**
**ஓராழி நெஞ்சே உவ.** 70

(குறிப்புரை): - முதலடியிலும் இரண்டாம் அடியீற்றிலும் உள்ள "அருணம்" - சிவப்பு. அஃது ஆகுபெயராய், முதற்கண்நெருப்பினையும், பின்னர் சூரியனது கிரணங்களையும் குறித்தன. பால் - பன்மை; தன்மை. ஆமாத்தூர்.ஒருதலம். இரண்டாம் அடியில் உள்ள "அருணாம்பால்" என்பதை, 'அருள் + நம்பால்'பிரித்து உரைக்க. 'ஆழி நெஞ்சே ஓர்; உவ' என மாற்றி, 'துன்பத்தில் ஆழ்கின்ற நெஞ்சே நினை; அதன் பயனாக மகிழ்ச்சியடை' என உரைக்க.

**உவவா நறுமலர்கொண் டுத்தமனை உள்கி**
**உவவா மனமகிழும் வேட்கை - உவவா**
**றெழுமதிபோல் வான்முகத் தீசனார்க் கென்னே**

**எழுமதிபோல் ஈசன் இடம்.** **71**

(குறிப்புரை): - 'ஈசனார்க்கு ஈசன் இடம், உத்தமனை மலர் கொண்டு உள்கி மகிழும்வேட்கை எழுமதி போல் என்' என இயைத்து முடிக்க.ஏகாரம் தேற்றம். "உத்தமன்" என்பது "ஈசனார்" எனப்பட்டவனையே குறித்தலால் 'அவன்' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. உவவாஉள்கி - மகிழ்ந்து நினைத்து, இரண்டாம் அடியில் 'உவ்வவா' என்பது வகரமெய் குறைந்து "உவவா" எனவந்தது. உகரம் சுட்டு. 'உந்த அவாவால் மனம் மகிழ்கின்ற வேட்கை எழும் மதி' என்க. மதி -புத்தி. உவவு ஆறு - உவா நாளில் (பௌர்ணிமையில்) எழுகின்ற திங்கள். என் - என்று அறி, ஈற்றடியில் உள்ள ஈசன் - தலைமை; 'ஈசனார்க்கு, நறுமலர் கொண்டுஉள்கி மகிழும் வேட்கை எழுகின்ற புத்தியேசிறப்புடைய இடம்' என்றபடி. உயர்த்தற் கண் ஒருமையோடு பன்மை மயங்கிற்று.

**இடமால் வலமாலை வண்ணமே தம்பம்**
**இடமால் வலமானஞ் சேர்த்தி - இடமாய**
**மூளா மதிபுரையும் முன்னிலங்கு மொய்சடையான்**
**மூவா மதியான் முனி.** **72**

(குறிப்புரை): - முதல் அடியில்,இடம் - இடப்பக்கம். மால் - மாயோன், மாலை -அந்தி வானம். தம்பம் இட - நிலைநிற்றலை இடும்படி.மால் வல மான் அம் சேர்த்தி - மருளுதலை மிக உடையமானை அழகாக ஏந்தி. 'அதற்கு (மதிக்கு) இடமாய சடை'என இயைக்க. புரைய - உயர்ந்து விளங்க, மூவா மதியான்- கெடாத அறிவை உடையவன்; 'நித்தியன்' என்றபடி.முனி - தவக் கோலத்தையுடையவன். இடப்பக்கத்தில்மாயோனை உடையனாய் இருத்தல் முதலிய வற்றைக் கூறி,இறுதியில் அவனது தவக்கோலத்தைப் புகழ்ந்தவாறு.

**முனிவன்மால் செஞ்சடையான் முக்கணான் என்னும்**
**முனிவன்மால் செய்துமுன் நிற்கும் - முனிவன்மால்**
**போற்றார் புரமெரித்த புண்ணியன்தன் பொன்னடிகள்**
**போற்றாநாள் இன்று புலர்ந்து.** **73**

(குறிப்புரை): - முனிவன் - தவக்கோலத்தை யுடையவன். மால் - சடை - பெரிய சடை.என்னும் - என்ற சொல்வாள். முனி வன்மால் செய்து -யாவரும் வெறுத் தற்குரிய வலியமையலைக் கொண்டு. முன் நிற்கும் - அவன் எதிரில் போய்நிற்பாள். முனிவன்மால் போற்றார் - கோபிக்கின்ற, வலிய அஞ்ஞானத்தையுடைய பகைவர். அடிகள்போற்றா நாள் இன்று. பாதங்கள் இவளைக்காப்பாற்றாது கைவிட்ட நாளாகிய இன்று புலர்ந்து -மெலிந்து 'இவள்'

என்னும் எழுவாய் வருவித்து, 'இன்றுபுலர்ந்து என்னும், நிற்கும்' - என முடிக்க. இதுதலைவியது ஆற்றாமை கண்டு செவிலி நொந்து கூறியது.

**புலர்ந்தால்யான் ஆற்றேன் புறனுரையும் அஃதே**
**புலர்ந்தானூர் புன்கூரான் என்னும் - புலர்ந்தாய**
**மண்டளியன் அம்மான் அவர்தம் அடியார்தம்**
**மண்டளியன் பின்போம் மனம்.** 74

(குறிப்புரை): - இரண்டாம்அடியில் தனிச்சீர் முதலாகத்தொடங்கி யுரைக்க.'கல் தளி', 'கற்றளி' ஆதல்போல், 'மண் தளி','மண்டளி' யாயிற்று. 'மண்ணால் (சுடுமண்ணால் -செங்கற்களால்) ஆகிய கோயில்' - என்பது பொருள்.பல கோயில்கள் இவ்வாறு அமைந்தன. 'திருவாரூர்ப்பரவையுள் மண்டளி' - என்பதும் எண்ணற்பாற்று.இங்குக் குறிக்கப் பட்டதும் அதுவேயாகலாம்.புலர்ந்து ஆய மண் - சுடப்பட்டு அமைந்த மண்.ஈற்றடியில் 'மண்டு + அளியன் - எனப் பிரித்து,'மிக்க அன்பில் விளங்குபவன்' என உரைக்க.'அம்மானவன்' என்பதில் 'அவன்', பகுதிப் பொருள்விகுதி. (பொழுது, பயனின்றி வீணே) வீணேவிடியுமாயின். புறன் உரை - அலர். அஃதே - முன்னிருந்தநிலையினதே. 'புல் ஆர்ந்த ஆன்' என்பதில்"ஆர்ந்த" என்பது முதல் குறுகியும், ஈற்று அகரம்தொகுக்கப்பட்டும் நின்றது - 'புல்லை உண்கின்றஇடபம்' - என்பது பொருள். புன்கூர் - திருப்புன்கூர்த்தலம், 'மனம் என்னும்' என முடிக்க. என்னும் - என்றுபதைக்கும். கைக்கிளைத் தலைவி கூற்று.

**மனமாய நோய்செய்தான் வண்கொன்றை தாரான்**
**மனமாய உள்ளார வாரான் - மனமாயப்**
**பொன்மாலை சேரப் புனைந்தான் புனைதருப்பைப்**
**பொன்மாலை சேர்சடையான் போந்து.** 75

(குறிப்புரை): - இரண்டாம்அடியின் தனிச் சீரில் "மனமாய" என்பதை,'மன் ஆம் ஆய் ஆ' எனப் பிரித்து, 'நிலை யான அழகாகஅந்த' எனப் பொருள் கொண்டு, 'அப் பொன் மாலை' எனஇயைத்து, 'அந்தப் பொன்போலும் கொன்றை மாலையை'என உரைக்க. ஈற்றடியில் உள்ள மாலை - தன்மை.'தருப்பை பொன் மாலை' என்பதை, பொன் தருப்பைமாலை' என மாற்றி, 'பொன்னாலாகிய தருப்பையின் தன்மையை உடையசடை' என்க. மனம் மாய நோய் செய்தான் - மனம்அழியும்படி துன்பத்தை உண்டாக்கினான். தாரான் -தரமாட்டான். மனம் ஆய உள்ஆர வாரன் - எனதுமனநிலையை உள்ளபடி உணர்தற்கு என்இருப்பிடத்தினுள்ளும் வரமாட்டான். 'என் செய்வது'என்பது குறிப்பெச்சம். இதுவும் மேலைத் துறை.

**போந்தார் புகஅணைந்தார் பொன்னேர்ந்தார் பொன்னாமை**
**போந்தார் ஒழியார் புரமெரித்தார் - போந்தார்**
**இலங்கோல வாள்முகத் தீசனாற் கெல்லே**
**இலங்கோலந் தோற்ப தினி.** **76**

(குறிப்புரை): - "புரம்எரித்தார்" என்பதை முதலிற் கொள்க.போந்தார் - வீதி வழியே வந்தார். புக அணைந்தார்- என் இல்லத்துள் புகுவார் போல அணுகிவந்தார்.பொன் நேர்ந்தார் பெற்றோர்க்குப் பொன்தரவும் இசைந்தார் (ஆயினும்) பொன் ஆம் ஐ போம்தார் ஒழியார் - பொன் போலும் அழகு பொருந்தியகொன்றைமாலையை விடார்; (தாரார்) போந்தார் -மறைந்துவிட்டார். எல்லே, இரக்கச் சொல், இனி,'எல் - பகல்' எனக் கொண்டு, 'எல்லே போந்தார்' எனமேலே கூட்டி உரைப்பினும் ஆம் மூன்றாம் அடியில்"இலங்கு ஓலம்" என்பதை 'ஓலம் இலங்கு' எனமாற்றி, 'பலரது முறையீடுகளை யுடைய முகத்தை யுடையாஈசனார்' என்க. ஈசனார்க்கு - ஈசனார் பொருட்டு.கோலம் தோற்பது இனி இலம் - அழகை இழப்பதை இனியாம் செய்யமாட்டோம். இஃது அருளாமை நோக்கி ஊடியுரைத்தாள் கூற்று.

**இனியாரும் ஆளாக எண்ணுவர்கொல் எண்ணார்**
**இனியானஞ் சூணிருக்கைக் குள்ளான் - இனியானைத்**
**தாளங்கை யாற்பாடித் தாழ்சடையான் தானுடைய**
**தாளங்கை யால்தொழுவார் தாம்.** **77**

(குறிப்புரை): - இரண்டாம் அடிமுதலாகத் தொடங்கி, "தாம்" என்பதை,"ஆளாக" என்பதற்கு முன்னே கூட்டி யுரைக்க.இனியா நஞ்சு - இனிப்பை (விருப்பத்தை) உண்டாக்காதநஞ்சு. நஞ்சு ஊண் இருக்கைக்கு உள்ளான் இனியான் -நஞ்சினை உண்டு, அதனை உள்ள அடக்கி யதனால் தானும்அதுவே போன்று இனித்தல் இல்லாதவன். 'கையால்தாளம் பாடி' - என மாற்றி, 'தாளத்தோடு' என உருபுவிரிக்க. முதல் அடியில், "இனி" என்றது, 'அவன்சிறிதும் அருளான் ஆனபின்பு' என்றபடி. இஃதுஆசிரியர் ஊடிக் கூறியது. "உங்களுக்கு ஆள் செய்யமாட்டோம்; ஒணகாந்தன் தளியுளீரே" என்றாற்போல்வன காண்க.

**தாமரைசேர் நான்முகற்கும் மாற்கும் அறிவரியார்**
**தாமரைசேர் பாம்பர் சடாமகுடர் - தாமரைசேர்**
**பாணியார் தீர்ந்தளிப்பர் பாரோம்பு நான்மறையார்**
**பாணியார் தீர்ந்தளிப்பர் பார்.** **78**

(குறிப்புரை): - தாம் அரைசேர் பாம்பர் - (நான்முகற்கும், மாற்கும்அரியாராகிய) அவர் தமது இடையிலே (கச்சாகச்)சேர்ந்த பாம்பினை உடையவர். தா மரைசேர்பாணியார் - தாவுகின்ற மான் பொருந்திய கையைஉடையவர். தீர்ந்து அளிப்பர் பார் ஓம்பு - பாசம்நீங்கி, அது நீங்காதாரை ஆள்பவர்களது தூய உலகத்தை(சுத்த மாயா புவனங்களை)க் காக்கின்ற(பரமசிவனார்) பாணித்தல் - தாமதித்தல்.பாணியார் - தாமதியாராய் தீர்ந்து அளிப்பர் -விரைந்து தமது உலகத்தினின்றும் நீங்கி வந்துஅருள் வழங்குவார்' பார் - இதனை (நெஞ்சே) நீஅறிவாயாக.

**பார்கால்வான் நீர்தீர்ப் பகலோன் பனிமதியோன்**
**பார்கோல மேனிப் பரனடிக்கே - பார்கோலக்**
**கோகரணத் தானறியக் கூறுதியே நன்னெஞ்சே**
**கோகரணத் தானாய கோ.** 79

(குறிப்புரை): - முதல் அடியில்அட்ட மூர்த்தங்களில்இயமானன் (ஆன்மா) தவிர,ஏனைய ஏழும் கூறப்பட்டன. இரண்டம் அடியில், 'பார்மேனி' என இயைத்து, 'பார்க்கத் தக்க திருமேனி' எனஉரைக்க. தனிச்சீரில் உள்ள பார் - நில உலகம் - கோகரணம், துளுவ நாட்டுத் தலம். ஆன் - அவ்விடம்'அவ்விடத்துச் சென்று' என்க. ஈற்றடியில், கோகு -ஆகாயம். கரணம் - உடம்பு. ஆகாயம் போலும் உடம்பைஉடைய கோ (தலைவன்) அநங்கன்; மன்மதன் என்றது,அவனால் உண்டாகின்ற துன்பம், 'நெஞ்சே, கோகரணத்தான் ஆய கோவினால் உண்டாகின்றதுன்பத்தைப் பரனடிக்கே கூறுதியோ' என இயைத்துமுடிக்க. கூறுதல் - விண்ணப்பித்தல். இதுவும்கைக்கிளைத் தலைவி கூற்று.

**கோப்பாடி ஓடாதே நெஞ்சம் மொழி கூத்தன்**
**கோப்பாடிக் கோகரணங் குற்றாலம் - கோப்பாடிப்**
**பின்னைக்காய் நின்றார்க் கிடங்கொடுக்கும் பேரருளான்**
**பின்னைக்காம் எம்பெருமான் பேர்.** 80

(குறிப்புரை): - 'நெஞ்சே,கோப்பாடி ஓடாதே' என மாற்றி முதலிலும், 'கூத்தன்'கோப்பாடிக் கோகரணம், குற்றாலம் கூறு' என மாற்றி,இறுதியிலும் வைத்து உரைக்க கோப்பாடி ஓடாதே -அரசரைப் பாடிக்கொண்டு அவர்கள் பால் ஓடாதே.'கோ' என்பது சொல்லால் அஃறிணையாதலின், அஃது இங்குப்பன்மையதாயிற்று, கோப் பாடிக் கோகரணம் -தலைவனது (சிவனது) இடமாகிய, பின்னைக்காய்க்கோப்பு ஆடி நின்றாற்கு - நப்பின்னைக்கு அன்பனாய்ஆயர்மகளி ரோடு கைகோத்துக் குரவையாடி நின்றமாயோனுக்கு. இடம் கொடுக்கும் - இடப் பாகத்தைக்கொடுத்த, எம்பெருமான்

பேர் பின்னைக்கு ஆம்.எமக்குப் பெருமானாகிய சிவனது நாமத்தைச்சொன்னால் அது, வருகின்ற பிறப்பிற்கு உறுதுணையாய்வந்து உதவும்.

**பேரானை ஈருரிவை போர்த்தானை ஆயிரத்தெண்**
**பேரானை ஈருருவம் பெற்றானைப் - பேராநஞ்**
**சுண்டானை உத்தமனை உள்காதார்க் கெஞ்ஞான்றும்**
**உண்டாம்நா ளல்ல உயிர்.** 81

(குறிப்புரை): - பேரானை ஈர்உரிவை - பெரிய யானையை உரித்த தோல்."ஆயிரத்தெண் பேர்" என்பதை வடமொழியில்,'அட்டோத்தர சகத்திர நாமம்' என்பர். ஈர் உருவம்- பெண்ணும், ஆணும் ஆய இருதிற உருவம். பேரா நஞ்சு - பிறரால் விலக்கலாகாத நஞ்சு. எஞ்ஞான்றும் - எந்தஒரு நாளும் 'உயிர் உண்டாம் நாள் அல்ல' (இறந்தநாளேயாம்) என்க. 'ஞான்று' என்பது இங்குப் பெயர்த்தன்மைப் பட்டு, எழுவாயாய் நின்றது."பெரும்பற்றப் புலியூரானைப் - பேசாதநாளெல்லாம் பிறவா நாளே"[1] என்ற அப்பர்திருமொழியையும் நோக்குக.

**உயிராய மூன்றொடுக்கி ஐந்தடக்கி உள்ளத்**
**துயிராய ஒண்மலர்த்தாள் ஊடே - உயிரான**
**பகர்மனத்தான் பாசுபதன் பாதம் பணியப்**
**பகர்மனமே ஆசைக்கட் பட்டு.** 82

(குறிப்புரை): - "உயிர்"மூன்றனுள் முதலது உயிர்ப்பு; மூச்சு - மூன்று மூச்சாவனஇடநாடி மூச்சு, வலநாடி மூச்சு, நடுநாடு மூச்சு. ஒடுக்கி -அடக்கி; கும்பித்து. ஐந்து - ஐம்புல ஆசை. 'ஐம்புலஆசையைப் பிராணாயாமத்தில் அடக்கி' என்றபடி.'பிராணாயாமம்' என்றது உபலக்கணம் ஆதலின், அஃதுஏனைய ஏழ் உறுப்புக்களையும் தழுவி, 'யோகம்' எனப்பொருள் தந்தது. "உள்ளம்" என்றதும் 'உயிர்'என்னும் பொருளதே. எனவே, "உள்ளத்து உயிர்"என்றது, 'உயிர்க்கு உயிர்' என்றவாறாம். சக்தியை,'தாள்' என்றல் மரபு. உயிரான். உயிராய் இருப்பவன்.'உயிருக்கு உயிராய் உள்ளது சக்தி; சக்திக்குஉயிராய் உள்ளது சிவம்' - என்றபடி. "பகர்"இரண்டனுள் முன்னது, 'அறுகுணங்களின் தொகுதியாகியபகத்தை யுடையவர்' என்னும் பொருட்டு. அறு குணங் களாவன ஐசுவரியம், திரு, புகழ்,ஞானம், வீரம், வைராக்கியம்' என்பன. (திருவாவதுநன்மை) இது 'பகவர்' என வருதல் பெரும்பான்மை."முக்கோர்ற்பகவர்"[1] முதலியன காண்க. பகர் -(அவன் பெயர்களைச்) சொல், 'மனமே, பாசுபதன் பாதம்பணிய ஆசைக்கட்பட்டு, ஐந்து அடக்கிய பகர்' எனஈயைத்து முடிக்க. [1. திருமுறை - 6.1.]

**பட்டாரண் பட்டர்ங்கன் அம்மான் பரஞ்சோதி**
**பட்டார் எலும்பணியும் பாசுபதன் - பட்டார்ந்த**
**கோவணத்தான் கொல்லேற்றன் என்றென்று நெஞ்சமே**
**கோவணத்து நம்பனையே கூறு.** 83

(குறிப்புரை): - பட்டார் அண் -அன்பு பட்டவர் அணைகின்ற. பட்ட அரங்கன் - பெயர்பெற்ற அம்பலவன். (அகரம் தொகுத்தல்) பட்டார்எலும்பு - இறந்தவர்களது எலும்பு, பட்டு ஆர்ந்தகோவணத்தன் - பட்டு இழைகள் பொருந்தியகோவணத்தை அணிந்தவன். கோ வண்ணத்து நம்பன் -ஆகாயத்தை வடிவமாக உடைய பழையோன், (ணகர ஒற்றுத்தொகுத்தல் பெற்றது.)

**கூற்றும் பொருளும்போற் காட்டியென் கோல்வளையைக்**
**கூற்றின் பொருள்முயன்ற குற்றாலன் - கூற்றின்**
**செருக்கழியச் செற்ற சிவற்கடிமை நெஞ்சே**
**செருக்கழியா முன்னமே செய்.** 84

(குறிப்புரை): - எல் கோல்வளை - ஒளி பொருந்தியனவும், ஒழுங்காய்அமைந்தனவும் ஆகிய வளையல்களை அணிந்தவள்;உமாதேவி. (அவளை) கூற்றின் - தனது திருமேனியின் ஒருகூற்றில் இருக்கத்தக்க. பொருள் - பொருளாக,(ஆக்கம் வருவிக்க) கூற்றும் பொருளும் போல் காட்டிமுயன்ற - சொல்லும், அதன் பொருளும் போலப் பிரிவற்றுத் தோன்றும்படி காட்சிப்படுத்து இருக்கச் செய்த. மூன்றாம் அடியில் 'செரு + கழிய 'எனப் பிரித்து, 'போர் ஓழியும்படி' என உரைக்க. இரண்டாம் அடியில் "செருக்கு" என்பது, உடல்வலிமையைக் குறித்தது. 'என் கோல் வளை' என்பதுபாடம் அன்று.

**செய்யான் கருமிடற்றான் செஞ்சடையான் தேன்பொழில்சூழ்**
**செய்யான் பழனத்தான் மூவுலகும் - செய்யாமுன்**
**நாட்டுணாய் நின்றானை நாடுதும்போய் நன்னெஞ்சே**
**நாட்டுணாய் நின்றானை நாம்.** 85

(குறிப்புரை): - முதலடியில்'செய்யான்' - செம்மை நிறத்தையுடையவன். இரண்டாம்அடியில் 'செய்யான்' - செப்பம் (நடுவுநிலைமை)உடையவன்; இதனை, "செஞ்சடையான்" என்பதன்பின் கூட்டுக. பழனம் ஒருதலம். செய்யா -படைத்து. முன்நாள் தூணாய் நின்றான் - படைத்தகாலம் முதலாகவே உலகத்தைத் தாங்கி நிலைபெறுத்துவோனாய் நின்றான். நாட்டு ஊனாய் நின்றான் - உலகபோகமாய் நின்றான். பின் இரண்டடிகள்'நாட்டுணாய்' என ஓதுவன பாடம் அல்ல.

**நாவாய் அகத்துளதே நாமுளமே நம்மீசன்**
**நாவாய்போல் நன்னெறிக்கண் உய்க்குமே - நாவாயால்**
**துய்க்கப் படும்பொருளைக் கூட்டுதும் மற்றவர்க்காள்**
**துய்க்கப் படுவதாஞ் சூது.** 86

(குறிப்புரை): - 'வாயகத்துஉளதே' என மாற்றுக. 'வாழ்த்த நா உளதாகவும், அதைக்கொண்டு நாம் உளேமாகவும், பிறவியாகிய கடலைமரக்கரம் போல நின்று கடப்பித்து, நன்னெறியின்பயனாகிய வீடுபேறாம் கரையை அடைவிக்க இறைவன்இருக்கவும் (நாம் அவனை வாழ்த்து தலைச்செய்யாமல்( வாயில் உள்ள அந்த நாவால் சுவைத்துஉண்ணுதற்குரிய திரட்டுவதிலே காலம்கழிக்கின்றோம். (அது நாம் உய்தற்குரிய உபாயம்அன்று.) இறைவனுக்கு ஆளாகிப் பணிசெய்து அதனால்நுகரப்படும் இன்பத்தை இன்பமாகக் கருதி முயலுதலேஉபாயமாகும்' என்க சூது - உபாயம்.

**சூதொன் றுனக்கறியச் சொல்லினேன் நன்னெஞ்சே**
**சூதன் சொலற்கரிய சோதியான் - சூதின்**
**கொழுந்தேன் கமழ்சோலைக் குற்றாலம் பாடிக்**
**கொழுந்தே இழந்தேன் குருகு.** 87

(குறிப்புரை): - வஞ்சனை. அஃதாவது தலையளி செய்வான் போலக் காட்டிச் செய்யாது போனமை. சூதன் - சூத முனிவர். இவர் வேதவியாத முனிவர்க்கு மாணுக்கரா யவருள் ஒருவர். தம்ஆசிரியர் பால் கேட்ட புராணங்கள் பதினெட்டினையும் நைமிசாரணிய முனிவர்க்கட்குக் கூறியவர். 'இவரால் சொலற்கரிய' என்றபடி. குற்றாலம், ஓருதலம். சூதின் - மாமரத்தின். 'சூதம' என்பது அம்முக குறைந்து "சூது" என வந்தது. கொழுந்தே கொழுந்து - போலும் கையினின்றே. குருகு - வளையல். இது நெஞ்சினைத் தூதுவிடக் கருதியவள் அதனை நோக்கிக் கூறியது.

**குருகிளவேய்த் தோள்மெலியக் கொங்கைமார் புல்கிக்**
**குருகிளையார் கோடு கொடாமே - குருகிளரும்**
**போதார் கழனிப் புகலூர் அமர்ந்துறையும்**
**போதாநின் பொன்முடிக்கட் போது.** 88

(குறிப்புரை): - "கொடாமே" என்பதை இறுதிக்கண் கூட்டி,மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. போது -பூக்கள் புகலூர், ஒருதலம். போதா - ஞான சொரூபனே.பொன்முடிக்கண் உள்ள போது (மலர்( கொன்றை.கொடாமே -

கொடாமையாலே, 'குருகு' என்பதுகைவளைக்கப் பெயராயினும் இங்குத் தோள்வளையைக்குறித்து நின்றது. 'மார்பின்கண்' என உருபு விரிக்க.ஒல்கி - தளர்ந்து 'மார்புல்கி' என்பது பாடம் அன்று.குருகு இணையார் - அன்னப் பறவை போலும் இளையமகளிர். 'இணையாது' என ஆறாவது விரித்து, "குருகிளவேய்த் தோள்" என்பதற்கு முன்னே கூட்டுக. கோடு -யானைத் தந்தம். மேற்போந்த கொங்கையைச்சுட்டுவ தாகிய சுட்டினை விரித்து, 'அக்கோடு' என்க.குரு - நிறம்; பொன்னிறம், பசலை, கிளரும் - மிகும்.'ஆதலின் நின் முடிக்கட் போதினைத் தந்தருள்'என்பது குறிப்பெச்சம். இது தோழி தலைவனைமாலையிரந்தது. தன் தலைவியது மெலிவு கூறுவாள்அதனைப் பலர்மேலும் இட்டுப் பொதுப்பட,"இளையார்" என்றாள். 'குருக்கிளரும்'என்பதில் ககர ஒன்று எதுகை நோக்கித்தொகுக்கப்பட்டது.

**போதரங்க வார்குழலார் என்னாவார் நன்னெஞ்சே**
**போதரங்க நீர்கரந்த புண்ணியனைப் - போதரங்கக்**
**கானகஞ்சேர் சோதியே கைவிளக்கா நின்றாடும்**
**கானகஞ்சேர் வாற்கடிமை கல்.** 89

(குறிப்புரை): - போது அரங்கவார் குழலார் - பூக்களுக்கு அரங்குபோல் உள்ளநீண்ட கூந்தலையுடைய மகளிர். என ஆவார் - அவர் உனக்கு என்ன பயனைத் செய்வார்? இரண்டாம் அடியில், "போ" என்பதைத் தனியே பிரித்து, இறுதிக்கண் கூட்டுக. தரங்கம் - அலை, 'போதுவர்'என்பது உகரம் தொகுத்தலாய் 'போதர்' எனவந்தது. 'கொண்டு வரப்பட்டவர்' என்பது பொருள். அங்கம் -உடம்பு. கானகம், முதுகாடு. 'ஆடும் கால்களையுடைய நகம் சேர்வான்' என்க, நகம் - கயிலாய மலை, கல் -கற்றுச் செய். "போ" என்றது. வலியுறுத்தற்பொருட்டு.

**கற்றான்அஞ் சாடுகா வாலி களந்தைக்கோன்**
**கற்றானைக் கல்லாத நாளெல்லாம் - கற்றான்**
**அமரர்க் கமரர் அரர்க்கடிமை பூண்டார்**
**அமரர்க் கமரரா வார்.** 90

(குறிப்புரை): - கற்று ஆன்அஞ்சு ஆடு - கன்றையுடைய பசுவினின்றும் உண்டாகின்ற ஐந்து பொருள்களில் (பஞ்ச கௌவியங்களில்) முழுகுகின்ற. காவாலி - கபாலி. களந்தை - களத்தூர். வேட்களம், நெடுங்களம் முதலாக, 'களம்' எனப் பெயர்பெற்ற தலங்கள் பல. கல் தானை - கல்லாடை. தானை -ஆடை. இதனை, "களந்தைக் கோன்" என்பதற்குமுன்னே கூட்டி, 'கோனை' என இரண்டாவது விரிக்க.கல்லாமை - அறியாமை. ஒருவாறு அறியினும் போற்றஅறியாமை,

"கல்தான்" என்பதில், "கல்"என்பது உவமையாகு பெயராய் உயிர் இல் பொருளைக்குறித்து, அதற்குரிய காலத்தை யுணர்த்திற்று உயிர்இப்பொருளின் காலம், யாதொரு பயனையும் தராதுசெல்வதாதலையறிக. 'தான்' என்பது தேற்றப்பொருட்டு. அஃறினை பன்மை யொருமை மயக்கம்."அமரர்" நான்கில் முன் இரண்டும் 'விரும்புபவர்' எனவும், பின் இரண்டும் 'தேவர்'எனவும் பொருள் தந்தன. அமரர்க்கு அமரர் - விரும்புவோரினும் மேலாய் மிக விரும்புவோர்,'விரும்புவோராய்' என ஆக்கம் விரிக்க. அமரர்க்குஅமரர் - தேவர்கட்கெல்லாம் தேவர்.

**ஆவா மனிதர் அறிவிலரே யாதொன்றும்**
**ஆவார்போற் காட்டி அழிகின்றார் - ஆஆ**
**பகல்நாடிப் பாடிப் படர்சடைக்குப் பல்பூப்**
**பகல்நாடி ஏத்தார் பகர்ந்து.** **91**

(குறிப்புரை): - முதற்கண் 'அவா'என்பது நீண்டு "ஆவா" என வந்தது.'யொதொன்றம் அறிவிலர்' என மாற்றுக.ஆவார்போல் காட்டி அழிகின்றார் - தாங்கள்மேல்மேல் உயர்வது போலக்காட்டி (உலகியலிலேமூழ்கிநின்று, உண்மையில்) அடியோடு அழிந்தொழிகின்றார்கள். ஆவா - இஃது இரங்கத்தக்கது. மூன்றாம் அடியில், 'பகவன்' என்பது இடைக்குறைந்து, "பகன்" என வந்தது 'பகனை' என இரண்டாவது விரித்து, 'பாடி ஆடி' என மாற்றியுரைக்க.'அவனது படர் சடைக்கு' என்க. பகல் நாடி -நாள்தோறும் தேடிக் கொணர்ந்து, தூவி - (அவன்நாமங்களைப்) 'பகர்ந்து ஏத்தார்' என்க.

**பகனாட்டம் பாட்டயரும் பாட்டோ டாட்டெல்லி**
**பகனாட்டம் பாழ்படுக்கும் உச்சி - பகனாட்டம்**
**தாங்கால் தொழுதெழுவார் தாழ்சடையார் தம்முடைய**
**தாங்கால் தொழுதல் தலை.** **92**

(குறிப்புரை): - பகல் நாட்டம்பாட்டு அயரும் - பகற் காலத்தில் அன்பர்கள்பாடும் பாட்டைக் கேட்பதிற் செல்லும். எல்லி -இரவில். பாட்டொடு பொருந்த ஆகுதலைச் செய்யும்.(இங்க 'பகல்' என்பது உலகம் நிலைத்துள்ளகாலத்தையும், 'இரவு' என்பது அஃது ஒடுங்கியகாலத்தையும் குறித்து நின்றன.) பகன் - 'பகன்'என்னும் பெயரை உடைய சூரியன். நாட்டம் - அவனது கண்.நாள் உச்சிப் பகல் தந்து ஆங்கால் - நாளானதுநண்பகலைத் தந்து பொருந்தும் பொழுது. (அஃதாவது,உச்சி வேளையில்) தொழுது எழுவான் -பிச்சையிடுவாரைக் கும்பிடுட்டுச் செல்வன்."தாழ்சடையான்" என்பதை முதலிற் கொள்க.தன்னுடையது ஆம் கால் (பாதம்) தொழுதல் தலையாயசெயலாம். "தொழுவார், சடையார்' எனப் பன்மைப்பாடமாயின. "அயரும்,

படுக்கும்" என்பன பன்மை ஒருமை மயக்கமாம். 'தன்னுடையது ஆம் கால்' என்றதுசாதி யொருமை அன்றி, 'அது உருபு பன்மைக்கண் வந்தது' எனினும் ஆம்.

**தலையாலங் காட்டிற் பலிதிரிவர் என்னும்**
**தலையாலங் காடர்தாம் என்னும் - தலையாய**
**பாகீ ரதிவளரும் பல்சடையீர் வல்லிடையீர்**
**பாகீ ரதிவளரும் பண்பு.** 93

(குறிப்புரை): - "தலையாய" என்பது முதலாகத் தொடங்கி, இகரம்தொகுக்கப்பட்ட 'ரதிவளரும் பண்பு பாகீர்' எனமாறிக் கூட்டி, 'அதனால் என்மகள்' என்பது வருவித்துஉரைக்க. முதல் அடியில், 'அம் காட்டித் தலையால்பலி திரிவர்' என மாற்றி, தமது அழகைக் காட்டிக்கொண்டு தலையால் ஏற்கும் பலிக்கு (பிச்சைக்கு)த்திரிவர்' என உரைக்க. தலையாலங்காடு, ஒருதலம்,'தாம் தலையாலங்காடர்' என்க. தாம் - என்னைமெலிவித்தவர், என்னும் - என்று பிதற்று வாள்.பாகீரதி - பகீரதனால் கொண்டுவரப்பட்ட கங்கை.ஈற்றடியில் 'பகீர்' என்பது முதல் நீண்டு,"பாகீர்" என வந்தது. பகீர் -பகிர்ந்தளிக்கமாட்டீர். 'இரதி' என்பது எதுகைநோக்கி முதற் குறைந்து நின்றது. 'விருப்பம் (ஆசை)என்பது. வளரும் பண்பு - வளர்தற்கு ஏதுவாகியகுணத்தையுடைய திருமேனி. 'பண்பு பகீர்' என்க. இதுவீதியுலாவில் செவிலி இறைவனைக் குறையிரந்தது.

**பண்பாய நான்மறையான் சென்னிப் பலிதேர்ந்தான்**
**பண்பாய பைங்கொன்றைத் தார்அருளான் - பண்பால்**
**திருமாலு மங்கைச் சிவற் கடிமை செய்வான்**
**திருமாலு மங்கைச் சிவன்.** 94

(குறிப்புரை): - 'பண் மறை. பாயமறை' எனத் தனித்தனி இயைக்க. பண் - செய்யப்பட்டபாய - பரந்த; விரிந்த. நான் மறையான் - பிரமன்.'சென்னிக்கண்' என ஏழாவது விரிக்க. பண் பாயகொன்றை - வண்டுகளின் இசை பரவிய கொன்றை மலர்."அருளான்" என்பதன் பின். 'ஆயினும்' என்பதுவருவிக்க. பண்பால் - தனது இயல்பாய குணத்தினால். ("மாலும்' என ஈற்றடியிற் சேர்த்து முடிக்கமூன்றாம் அடியில், "திருமாலும்" என்பதனோடு இயைய, 'மங்கையும்' என எண்ணும்மையும், 'ஆய' என்பதுவிரித்து 'அவ்விருவரும் ஆய சிவற்கு' என்க. மங்கை, உமாதேவி 'அச்சிவற்கு' எனச் சுட்டு வருவித்துரைக்க. ஈற்றடியில் "மங்கை" என்றது காதற்பட்டதலைவியை. மடக்களிப் பயன் வேண்டி, 'சீவன்' என்பதுகுறுக்கப்பட்டது. அதற்குமுன் நின்ற சகர் ஒற்றுவிரித்தல். ஈற்றடியில் உள்ள திரு - அழகு.அதன்பின் வந்த, 'மயங்கும்' என்னும் பொருட்டாகிய "மாலும்" என்பது, 'மயங்கிக் கெடும்' எனத்

தன்காரியம் தோற்றி நின்றது. "சிவன் தார்அருளானாயினும், மங்கை. தனது பண்பால் அவனுக்கு அடிமைசெய்யவேண்டி, உயிர் தன் அழகு கெட மயங்குகின்றாள்' என்றபடி. இது தலைவியது ஆற்றாமை கண்டுசெவிலி கவன்றுரைத்தது.

**சிவன்மாட் டுகவெழுதும் நாணும் நகுமென்னும்**
**சிவன்மேய செங்குன்றூர் என்னும் - சிவன்மாட்டங்**
**காலிங் கனம்நினையும் ஆயிழையீர் அங்கொன்றை**
**யாலிங் கனம்நினையு மாறு.** 95

(குறிப்புரை): - "ஆழிழை"என்பதை முதலிலும், "சிவன் மாட்டுக எழுதும்"என்பதை இறுதியிலும் வைத்து உரைக்க. "நாணும்"என்பதன் இறுதி ஒற்று சந்தி வகையாற் கெட்டது.நாணும் - நாணுவாள். 'நகும்' என்னும் - (ஊர்)'சிரிக்கும்' என்பாள், செங்குன்றூர். கொடிமாடச்செங்குன்றூர்; ஒரு தலம், அங்குச் சிவன்மாட்டுஆலிங்கனம் நினையும் - அவ்விடத்தில் சிவனிடத்தில் தங்கித் தழுவுதலை நினைவாள்.இங்ஙனம் நினையும் ஆறு - இவள் இவ்வாறெல்லாம்எண்ணு கின்ற முறைமை. ஈர் அம் கொன்றையால் -குளிர்ந்த அழகிய கொன்றை மாலை காரணமாகவாம்.(ஆகையால் இவளை) சிவன்மாட்டு உக எழுதும் -சிவடைத்தில் கொண்டுபோய் விட்டுவிடப்புறப்படுவோம். இதில் "சிவன்" என்பது சொற்பொருட் பின்வரு நிலையாகவே வந்தது. இதுவும்மேலைத் துறை.

**ஆறாவெங் கூற்றுதைத் தானைத்தோல் போர்த்துகந்தங்**
**காறார் சடையீர்க் கமையாதே - ஆறாத**
**ஆனினித்தார் தாந்தம் அணியிழையி னார்க்கடிமை**
**ஆனினத்தார் தாந்தவிர்ந்த தாட்டு.** 96

(குறிப்புரை): - ஈற்றடியை, "ஆறாத" என்பதற்கு முன்னே கூட்டி, அது முதலாகத் தொடங்கி யுரைக்க. ஆனின் அத்தார் தாம் ஆட்டுத்தவிர்ந்த பசுக்களின் கழுத்தில் உள்ள மாலைகள்(மணிகட்டிய வடங்கள்) அசைதலை ஒழிந்தன. ('பசுக்கள் கொட்டில்களில் சென்று அடங்கின; இரவுப்பொழுதாயிற்று' என்றபடி, அதனால்) ஆனினத்தார் -ஆயர்கள் தாம் தம் அணியிழையினார்க்கு அடிமைகளாயினர். 'ஆயினும், இஃது ஆறு ஆர்சடையீர்க்கு அமையாதே; பொருந்தாதோ' என்க. இஃது இரவின் கண்தனிப் படர் மிகுதியால் ஆற்றாத தலைவி தலைவனை எதிர் பெய்துகொண்டு கழறி யுரைத்தது. எனறே, இது"மிக்க காமத்து மிடல்"[1] பெருந்திணைத் துறையாம். முதற்கண் உள்ள ஆறு ஆ - முறைமை உண்டாக. முறைமை யாவது சிவனடி யார்மேல் கூற்றுவன் செல்லாது தவிர்தல்.

தனிச் சீரில். ஆறாத - சினமும் கன்றைப் பிரிந்த துயரமும் தணியாத ஆன் இனம்என்க. சினம், ஆனேற்றுக்கு உரியது.

**ஆட்டும் அரவர் அழிந்தார் எலும்பணிவார்**
**ஆட்டும் இடுபலிகொண் டார்அமர் - ஆட்டுமோர்**
**போரேற்றான் கொன்றையான் போந்தான் பலிக்கென்று**
**போரேற்றான் போந்தான் புறம்.** 97

(குறிப்புரை): - இரண்டாம்அடியில், 'அட்டும்' என்பது நீண்டு, "ஆட்டும்"என வந்தது. அட்டும் நிரப்புகின்ற. அமரரை ஆட்டும்ஓர் போர் ஏறு - தேவர்களை தன் இச்சைப்படி.நடத்துகின்ற திருமாலாகிய போர் விடை.சொல்லளவில் 'பலிக்கு' என்று சொல்லிப்போந்தானாயினும் உண்மையில் மகளிர்மேற்செய்யும் போரினை ஏற்றானாகியே புறம் போந்தான்- என்க. இதுவும் கைக்கிளைத் தலைவி தன் தோழிக்குகூறியது.

**புறந்தாழ் குழலார் புறனுரைஅஞ் சாதே**
**புறந்தாழ் புலிப்பொதுவுள் ஆடி - புறந்தாழ்பொன்**
**மேற்றளிக்கோன் வெண்பிறையான் வெண்சுடர்போல் மேனியான்**
**மேற்றளிக்கோன் என்றுரையான் மெய்.** 98

(குறிப்புரை): - புறந்தாழ்புலிப் பொதுவுள் ஆடி - நகர்க்குப் புறத்தேதங்குகின்ற புலிக்கு (வியாக்கிர பாதருக்கு) உரித்தாகிய மன்றினுள் நடனம் செய்பவனும், வெண்பிறை யானும்,வெண்சுடர்போல் மேனியானும் ஆகிய சிவன், புறம்தாழ் புரிகுழலாய் - பின்புறத்தே நீண்டுதொங்குகின்ற கூந்தலை உடைய ஊர்ப் பெண்கள்சொல்கின்ற. புறன் உரை அஞ்சாதே - புறங்கூற்று மொழிக்கு அஞ்சாமலே புல தந்து - தழுவுதலாகியபுணர்ச்சியைக் கொடுத்து. ('புற்றந்து' என்பது இடைக்குறைந்து நின்றது.) ஆழ் பொன்மேற்று அளிக்கோன் -துன்பத்துள் ஆழ்கின்ற, திருமகள் போல்பவளாகியஇவள்மேல தாகிய அன்பையுடைய தலைவனாயினும்.'மேற்றளிக் கோன்' என்று மெய் உரையான் - 'தான்இத்திருமேற்றளித் தலத்தில் உறைகின்றதலைவன்தான்' என்னும் உண்மையைக் கூறிற்றிலன்,'கூறியிருந்தால், இவள் இவ்வாறு செயலனும் நிலையைஅடைதற்கு முன்பே கொண்டுபோய் அவனிடம்சேர்த்திருக்கலாம்' என்பது கருத்து. திருமேற்றளி,காஞ்சியின் கண்ணதாய ஒருதலம். அப்பெருமான்இத்தலைவியைப் புல்லியதிலனாயினும் இவளதுநிலைமையை வைத்துப் புல்லினானாகச் செவிலி கருதி இரங்கினாள் என்க. எனவே, இது கைக்கிளைத்தலைவியது கையற்ற நிலையைக் கண்டு செவிலிஇரங்கிக் கூறியதாம்.

மெய்யுரையாமை, தலைவி அவனைஅறிந்து கூறாமையாலும், தோழியர் அறிந்துகூறினமையாலும் அறியப்பட்டதாம். வெண்சுடர் -சந்திரன். சிவபெருமானுக்கு வெண்சுடர்போல் மேனிதிருநீற்றால் அமைந்தது. [1. தொல் - பொருள் - அகத்திணையியல்]

**மெய்யன் பகலாத வேதியன் வெண் புரிநூல்**
**மெய்யன் விரும்புவார்க் கெஞ்ஞான்றும் - வெய்ய**
**துணையகலா நோக்கலா போற்றகலா நெஞ்சே**
**துணையிகலா கூறுவான் நூறு.** 99

(குறிப்புரை): - மெய் அன்பாவது, பயன் கருதாது செய்யப்படும் அன்பு. 'அன்பினின்றும்' என் ஐந்தாவது விரிக்க, வேதியன்- வேதம் ஓதுபவன். 'வேதப் பொருளாய் உள்ளவன்'என்றும் ஆம், புரி நூல் மெய்யன், புரிநூல்பொருந்திய திருமேனியை உடையவன். வெய்ய துணைஅகலான் - விரும் பத்தக்க துணையாய் இருத்தலைநீங்கான். நோக்கு அகலான் - அருட் பார்வையைவிடான். இகலா நெஞ்சு - மாறு படாத நல்ல மனம், 'வான்நூறு கூறு துணை இகலா' - என மாற்றி, (அவனது பெருமைக்கு)அண்டங்கள் நூற்றில் ஒரு கூற்றளவு ஒவ்வா எனஉரைக்க. இகலுதல் - ஒத்தல் 'நெஞ்சே, வேதியனும்,நூல் மெய்யனும், விரும்புவார்க்கு அகலாதவனும் ஆகியஅவனை அண்டங்கள் நூற்றில் ஒரு கூறு ஒவ்வா; அவனைப் போற்று' என இயைத்து முடீக்க.'அகலா' என்பன பாடம் அல்ல.

**நூறான் பயன்ஆட்டிநூறு மலர்சொரிந்து**
**நூறா நொடிஅதனின் மிக்கதே - நூறா**
**உடையான் பரித்தளரி உத்தமனை வெள்ளே**
**றுடையானைப் பாடலால் ஒன்று.** 100

(குறிப்புரை): - நூறு ஆன் பயன் - நூறு பசுக்களின் பால். நொடிவது - சொல்வது. நூறாநொடிவது - பெயர்கள் 'நூறு' என்னும் எண் படச்சொல்வது. "நூறா உடையான்" என்பதில் (நூறு 'என்பது அளவின்மையைக் குறித்து, அத்தகையவான குணங்களைக் குறித்தது. இறைவன் செய்யும் தொழில்,வகையால் ஐந்தாயினும் விரியால் எண்ணிலவாகலின், அவற்றிற்கு ஏற்பக் குணங்களும்எண்ணிலவாம். இதனை,

**எண்ணில் பல்குணம் எழில்பெறவிளங்கி**

என்னும் திருவாசகத்தாலும் அறிக. 'நூறு ஆன் பயன்ஆட்டுதல் முதலிய வற்றினும் ஒன்று பாடல் மிக்கது'என இயைத்து முடிக்க. "பாடல்" என்றதனால்"ஒன்று" - என்றது 'பாட்டு' என்பது போந்தது.ஆல், அசை, இதனால், பொதுப்படப் பாமாலை

சாத்துதற்பயன் கூறியதுடன், இவ்வந்தாதியால் துதிப்பார்க்குவரும் பயனும் கூறப்பட்டதாம். ஈற்றில் நின்ற"ஒன்று" என்பது முதற்பாட்டின் முதலிற் சென்றுமண்டலித்தல் காண்க.

**சிவபெருமான் திருவந்தாதி - முற்றிற்று**

திருச்சிற்றம்பலம்